*Ta<u>n</u>avaiciya ūḻiya<u>n</u>*

*Malar 3, ita<u>l</u> 4*

*October 06, 1922*

Record no. 148

உ
சிவமயம்

தந்தி விலாசம்— "Oolian" Regd. No. M. 1509. "Dhana Vysia Oolian"

# தனவைசிய ஊழியன்

தனவைசிய ஊழியர் சங்கத்தினின்றும்
வெள்ளி தோறும் வெளிவருவது.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்—திருக்குறள்.

ஊழையும் உப்பக்கங் காண்பர் [redacted]
தாழா துஞற்று பவர்—திருக்குறள்.

மலர் ௩. காரைக்குடி துந்துபிஸு புரட்டாசி ௴ ௨0௳ (௬—௧0—௧௯௨௨) இதழ் ௭



## ஔவியம் பேசேல்.

“ஔவியம் பேசேல்” என்பது பொறாமையால் பேசாதே எனப் பொருள்படும். இவ்வெளவியம் என் பதனை வள்ளுவனார் “அழுக்காறு” என ஆளுங்கின் [illegible] “அழுக்காறாமை” என ஒரு அதிகாரமும் திருக்குறளில் வைக்கப் பட்டிருக்கிறது. இவ்வழுக்காற்றினால் வருங்கேட்டைப்பற்றி நமது நாயனார் கூறியதை முற்றிலும் கைவிட்டு ஔவியம்பேச ஆரம்பித்ததினாற்றான் நமது செல்வத்திருநாடு இன்றைய நிலையடைந்தது என்பதில்லையின்று! இவ்வழுக்காற்றை மாக்கிரமுமொருவன் கொண்டுவிடுவானானால், இம்மையிலும் மறுமையிலும் நல்வழியின்றி அவன் கெடுதற்கு, அவன் மாத்திரமின்றி அவன் சுற்றமும் உடன் கெடுதற்கு பிற எதுவும் வேண்டுவதில்லை. இது ஒன்றே சாலும் என்பதை நமது தெய்வத் திருப்புலவர் திறம்பட அறைகின்றார். அன்றியும் இதனை நாம் அனுபவித்தே தெரிந்துகொண்டிருக்கிறோம். “அறனாக்கம் வேண்டாதானென்பான் பிறனாக்கம் பேணாதழுக்கறுப்பான்” “அழுக்காறுடையார்க்கது சாலும் ஒன்னார் வழுக்கியுங் கேடீன்பது” “கொடுப்பதழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம் உண்பதூஉம் இன்றிக்கெடும்” “அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள் தவ்வையைக் காட்டிவிடும்” என்பன அருமைத்திருக்குறள்கள். இவ்வழுக்காறு—பொறாமையை மேற்கொண்டு நமது நாடு இவ்வளவையும் அடைந்துவிட்டதை நாம் இன்று கண்கூடாகக் காண்கின்றோம். பொறாமை வாய்ப்பட்ட மக்கள் அனைவரும் உடைவழியின்றிப் பல விதத்துன்பங்களையும் அனுபவித்து இடர்ப்பட்டுழல்வது திண்ணம்.

[illegible] நாகரீகத்துக்குக் கற்பித்துப் பண்டை நாள் தொட்டே தனக்கு நிகரில்லையென வாழ்ந்த ஒரு பெரும் நாடே இப்பொறாமைவாய்ப்பட்டதனால் வள்ளுவர் வாக்கிற்கிணங்க இடர்ப்பட்டுழல்வதை நாம் இன்றும் பார்க்கின்றோமென்றால் பொறாமை வாய்ப்பட்ட மக்களைப் பற்றிப் பேசுவானேன்? நமது நாடு பண்டை நாளில் பெற்றிருந்த பெருமை என்ன? இந்நாளில் பெற்றிருக்கும் சிறுமை என்ன? இதற்குக் காரணம் இப்பொறாமை என்பதை யார் மறுக்கமுடியும்? நமக்குள் பொறாமை யேற்படாவிட்டால் அன்னியர் நமது எல்லைக்குள் எப்படி நுழைந்திருக்கமுடியும்? நாம் ஒருவரோடொருவர் பொறாமைகொண்டு நமது நாட்டைப் பிறருக்குக் காட்டிக்கொடுத்தோம்; நமது மர்மங்களைப் பிறருக்கு அறிவித்தோம்; நமக்கு அழுக்காறு மிகுதிப்பட்டமையான் நமது பிற்கால விளைவை அந்நாளில் அறிந்தோமில்லை. நமது ஔவையார் எழுத்தறியும் பொழுதே நாமறிவான் இயற்றிய வாக்கியத்தையும் நமது நாயனார் உபதேசத்தையும் பிற பெரியார் வாய்மொழிகளையும் மறந்தோம். பொறாமையை மேற்கொள்ளின் பின்னே எவை விளையுமென்று நாயனார் விதித்தாரோ அவையனைத்தையும் அநுபவித்தோம்; அனுபவித்துக்கொண்டுவருகிறோம். நமது இற்றை நிலைக்கு நமது செயல் காரணமேயன்றிப் பிறரைக் கூறுதல் அறியாமை! நாம் முன்னர்க் குறிப்பிட்டிருக்கும் செய்யுட்கேற்ப, பிறனாக்கம் பேணாதழுக்காற்றைச் செய்தோம்; அதனால் அறமும் செல்வமும் வேண்டாமென்று நாமேகூறியவர்களாக ஆகிவிட்டோம்; இதுகாலைச் செல்வம் யாவையும் பிற நாடுகட்குப்பல துறையினும் நாவாயில் ஏற்றியனுப்பிவிட்டுத் தவிக்கின்றோம். “அழுக்காறு என்பது இருக்குமானால் வேறு பகைவர் வேண்டுவதில்லை: அது ஒன்றே அவர்களைக் கெடுப்பதற்குப்போதும்” என்றபடி நமது நாட்டைக் கெடுப்பதற்கு இவ்வழுக்காறே போதியதாகி விட்டது. அழுக்கறுப்பின் சுற்றமும் உடுப்பதும், உண்பதுமின்றிக் கெடும் என்றபடி, ஒரு சிலர் பொறாமையை மேற்கொண்டொழுகியமையினாலே, சுற்றம் மாத்திரமல்ல,ஒரு நாட்டையே ஒருசில பொறாமை உடுக்கவும் உண்ணவுங் கூடவழியின்றிக்கெடுத்துவிட்டது. தற்போழ்து நமது நாட்டில் உண்ணவும் உடுக்கவும் பொருளின்றி யலைவார் பலராகிவிட்டனர். நமது வள்ளுவர் வாய்மொழிப்படி அல்லாமலும் பொருளுள்ள சிலரும் இன்னும் பொறாமைவாய்ப்பட்டுழல்வதனால், நமது நாட்டு உணவு உடையை மேற்கொள்ள அறியாது பிறநாட்டை யெதிர் நோக்கியலைச்சழிகின்றனர். பொறாமையினின்றும் [illegible] பட்ட ஒரு கூட்டத்தார் தந்நாட்டுச் சிறு உணவு உடையை மேற்கொண்டு வருகின்றனர். (உடுப்பதும் உண்பதுமின்றிக் கெடுவதற்கும், நம்மை மறந்து பிறர்க்குரியவற்றை உடுத்து உண்டு கெடுவதற்கும் என்ன வேற்றுமை? இரண்டும் ஒன்றே அறிஞர்க்கு.) அழுக்காறுடையானைச்செய்யவளாகிய திரு அவளுக்குமூத்தவளைக் காட்டிவிடுவாள் என்றபடி, நமது நாட்டுத்திரு, இந்நாள் அந்நிய நாடுகளை அலங்கரிப்பதை நாம் பார்க்கின்றோம். பொறாமையினால் இந்நிலையுற்ற நாம் இன்னும் அதனைவிடாது அதனையே மேற்கொண்டொழுகுவோமானால், நம்மை மனித்வர்க்கத்தில் உலகம் சேர்க்குமோ? ஔவியம் பேசி நாமடைந்த பலன் போதும். இனி அது நமக்கு வேண்டாம். (திருச் செற்றுத் தீயுழி யுய்த்துவிடும்) அழுக்காறென்ற ஒரு பாவியை நமக்கு அளித்ததாகவு மிருக்கவிடாது அடித்துத் துரத்திவிடுவோம். உதாரணமாக ஈண்டு நமது நாடு எடுத்துக்கொள்ளப் பெற்றதெனினும், அழுக்காற்றினால், கெட்ட சமூகம், கெட்டமனிதர்கள் எவ்வளவோ உண்டு. பிறன் செல்வங்கண்டோ, பிற கண்டோ, பொறாமைப்பட்ட ஒருவன் முன்னுக்கு வருவதென்பது இல்லவே யில்லை. பிறவிப்பேற்றையடைய விரும்புபவன், தன்சந்ததி, தன்சுற்றம், தன் சாதி, தன்பாஷை, தன்மதம், தன்னாடு

## மலாய் ஸ்டேட் ரப்பர் விலை ஏரமாட்டாதா?

(சென்ற வாரத்தொடர்ச்சி)

அச்சமயம் ஏக்கர். க000 வெள்ளி மதிப்பதானால் தற்சமயம் நமக்குள்ள பாக்கியினால் எ000, அ000-ம் மதிக்கப்படுகிறது. அதற்கு வாங்குபவரில்லை. அநேகர் தோட்டம் எ000 அ000 பெறுமென எண்ணி அதற்கு மேலும் கொடுத்திருக்கின்றனர். தற்சமயமிருக்கும் நிலையில்-க000 முதல் ந.000வரை வெளியானால் போதும். தோட்டத்தை ஓட்டிக் கொடுக்கப்பட்டுள்ள தொகையை விட ஆசாமியைப் பொருத்து பாக்கியாயுள்ள தொகைக்கு ஆசாமியிடம் சொத்திருந்தாலும் வருவாயிருந்தாலும் வசூலிக்கலாமே தவிற பர்மா இந்தியா சிலோனைப்போல ஆள்பேரால் வாரண்டெடுத்து ஆளைப்பிடித்து ஜெயிலில் வைத்து வாங்கவும் முடியாதாம். இந்தவழக்கம் மலாய் ஸ்டேட்டைத்தவிறமற்ற எந்தபாகத்திலுமிருப்பதாகத் தெரியவில்லை. ஒருகாலத்தில் வட்டித்தொழிலே சிறந்ததாய்த் தெரிந்தது. தற்காலமோ எங்கே பார்த்தாலும் கூட்டுறவுச் சங்கங்களும் பாங்குகளும் வட்டியைப்பற்றிய சட்டங்களும் யேற்படப்போக, இங்கிலீஷ் ராஜாங்கத்தாருக்கும் அதிருப்தியேற்பட்டு அத்தொழிலுக்கே செல்வாக்கில்லாது ஒழிந்துவருகின்றது. பெரும்பாலும் வட்டித்தொழில் நம்மவர் செய்வது ஒருவர் கொடுத்த இனத்திலே பலர் கொடுப்பதும் ஒரு ஊரிலே பலர் கடைவைத்து வட்டியை குறைப்பதுந்தானே? அப்படிப் பலர் கொடுப்பதால்த் தானே ஆசாமிகளும் தொழிலின் லாபம் நஷ்டம் பாராது செய்கிறார்கள். எதாவது நஷ்டமெனில் நமக்கு யேற்படும் நஷ்டமே. இன்ஸால்வெண்டுக் கணக்குக் கொடுப்பதும் இக்காலத்தில் சுலபம். ஆசாமி கொஞ்சம் யோசிப்பினும் கோர்ட்டாரே கொடுக்கும்படி தூண்டுகின்றனரன்றோ? இச்சமயம்நம்மவர்களிடமுள்ளரப்பர்த்தோட்டக்கிராண்டுகளையும்வீட்டுக்கிராண்டுகளையும் புதுக்கடை வைக்கப்போகிறவர்கள் நல்ல வட்டிக்கு குறைந்த தொகைக்கு ஒப்புக்கொள்ளலாமெனவும் சொல்லுகின்றனர். இந்த வட்டியையும் இனத்தில் ஜாஸ்தியாய்த் தொகையேற வேணுமென்பதையும் பார்த்துத்தான் நம்மவர் ஏமாந்ததும் ஏமாறுவதும், எவ்வளவோ யோக்கியப் பொறுப்பிருப்பதையும் தொகை மொத்தமாய் அநேகருக்கு மலாய்ஸ்டேட்டில் அகப்பட்டுக்கொண்டு இந்தியாவுக்கு வர விழிப்பதையும் அறிந்தேனும் வரவர வட்டித்தொழிலைமாற்றி நம்மவர்வியாபாரத்தைக் கைக்கொள்வார்களாக. வெள்ளிவிலை குறைந்த சமயம் வெகு பணம் இந்தியாவிலிருந்து போனதாலன்றோ வட்டியைப்பார்த்து பகிழ்ந்து மறுபடி அனுப்ப வழியில்லாது இனங்களில் தாருக்குமாறாகக் கொடுத்தனர். பின் குறைந்த வெள்ளி விலை கூடி ஒரு நிதானத்துக்கு வர ரப்பர் விலை யேறவில்லை. ரப்பருக்கு விலை குறையப்போக ஆசாமிகளும் விழிக்கின்றனர். தோட்டவிலைப் பொருளாகிய பாலுக்குகிராக்கியோ பெருவிலையோ யிருக்க வேணுமென்பதை நாம் ஈஸ்வரனிடம் பிரார்த்திக்கவேண்டியதிருக்கின்றன. திருவருள் செயலால் ரப்பர் விலையேறினாலும் நம்மவர்கட்குத் தோட்டம் பெறுமதிக்கும் டவுன்களிலுள்ள வீட்டுப் பெறுமதிக்கு மேலுள்ள பாககிகள் எவ்விதத்தும் சுலபமாய் வந்துவிடுமெனச் சொல்லமுடியாது. மழை பெய்துக்கொண்டிருந்தால் தண்ணீர் வந்துகொண்டிருக்கும். அப்படிவந்துகொண்டிருப்பதால்கட்டுக்கடைத் தண்ணீரில்குறைந்தாலும்பாதகமில்லை மழையோ முழுதுமில்லை. கட்டுக்கடையும் வரவரச்சுருங்கிவருகின்றது. அதைப்போல் நம்மவர்களுக்குப்பணமேல் சரியாக நடந்துவந்த சமயம் பணம் மிதப்பாகத்தெரிந்தன. இச்சமயம் கொடுத்த இனத்திலிருந்து பணம் வராததால் மலைப்பாகயிருக்கிறது. நம்மவர் அதைச் சிறிதேனும் உணரவில்லை. கடன் வாங்கி டாம்பீகச்செலவு செய்கின்றனர். அதை நன்கு உணர்ந்திருப்பின் செட்டான வாழ்க்கையின் சேட்டையையாரும் ஒடிக்கமாட்டார்கள். பொருள் வந்த சமயம் கண் தெரியாது கன ஆட்டம் ஆடுபவர்களும் குறைந்தபொழுது ஆட்டத்தைக் குறைப்பவர்களும் ஒரு சிறிதும் பொருத்தமில்லை யென்பதை இச்சமயமேனும் அறிவார்களாக. இச்சமயம் நம் நாட்டில் தர்மம்பெறவருபவர்களுக்கெல்லாம் சொல்லும் தாக்கல் மலாய் நாட்டின் ரப்பர்விலையின் வீழ்ச்சி விஷயமே. திருவருள் செயலால் விரைவில் ரப்பர் விலைகூடி நம்மவர் பணங்களும் வெளியாகவேணுமென ஆவலோடு எதிர்பார்த்திருக்கிறோம்.

சு. பழநியப்பா.

---

முதலிய நன்னிலையெய்தவேண்டுமென்று விரும்பும் ஒருவன் ஔவியம் பேசுதலை அறவே யொழித்துவிடல் வேண்டும். "அழுக்காறு அவா வெகுளி இன்னாச் சொல் நான்கும் இழுக்காவியன்றதறம்" என்றவிடத்து அழுக்காறையே முதலில் வைக்கப்பட்டிருக்கிறது. அழுக்காறு என்ற தீநெறிபற்றி அறனல்லாதகாரியங்கள் செய்தழியாது, அழுக்காறிலாத இயல்பை ஒழுக்காறாக்கொண்டு, ஔவியம் பேசேல் என்ற ஔவையார் வாய்மொழிக் கிலக்காகிப் பிறவிப்பேற்றையடைய வேண்டுவது பேரறிஞர்கடன்.

## சுத்தவீரன் எழுதுகிறார்:—

### எமது மளிகைக்கடை.

மணம். இது முக்கியமான சரக்கு. வெகுநாளாக எதிர்கொண்டழைத்த சரக்கு. முதலாவதாக எமது கடையில் இந்தச்சரக்குவியாபாரஞ்செய்ய நேர்ந்தமைக்கு அதிர சந்தோஷங்கொள்ளுகிறேன். இது இல்வாழ்க்கைக்குத்தான் அஸ்திவாரம். இந்தச்சங்கதி நமது தனவைசிய சமூகத்தில் திறுகல்முறுகலாய்—பெரிய முதல் விழுங்கி வியாபாரமாகிவிட்டது. நமது இரண்டாயிரம் சகோதரர்கள் கலியாணமில்லாமலிருக்கிறார்களே யென்ற கவலை யாருக்கிருக்கிறது? இது யாருக்கு வந்தவிருந்து? நம்மள் சாதிதானே "குலத்தையுத்தரிக்க நல்ல குலமகனொன்றே போதும்" என்று கேட்டிருக்கிறோமே. அதையார் கவனிக்கிறார்கள். கிழவன் பாட்டுக்கிண்ணாரக்காரனுக்கு ஏறுமா? பெரிய பேர்வளிகள் தூங்கவே-சின்னப்பேர்வளிகள் என்னசெய்வார்கள். எல்லாரும் ஒருமாதிரி ஆகிவிட்டார்கள். யாரெப்படிப் போனாலென்ன "வெந்ததைத்தின்று விதிவந்தால் சாகிறதுதானே" என்று எண்ணினார்களோ எக்காரணமோ தெரியவில்லை. கலியாணச் சங்கதி கசகலாகிவிட்டது! ஐயோ! அநியாயமே! நாற்பது வயது வந்தும் கலியாணம் நடக்கவில்லை. எவ்வளவு கெட்டிக்காரன். எவ்வளவு உண்மையாளன்— எவ்வளவு அழகு பொருந்தியவனுக்கும் கலியாணம் பூச்சியமாகிவிட்டது. இதனையறிந்த நமது ஊழிய சங்கத்தார் பலவிதப் பிரயாசையுடன் வேண்டுவன செய்தார்கள். விழித்துக்கொண்டார்களையா! தடபுடலாக வந்தார்கள்; கூடினார்கள்; பேசினார்கள்; தீர்மானித்தார்கள்; கடைசியாகச் சொட்டிக் கவிழ்த்து—ஒன்றுமில்லைக் கோவிந்தாவென்று முடிந்து விட்டது. இப்பொழுது "செலவு" என்ற சில்லரைப் பூதமெல்லாம் ஊரூராகத் தலைதூக்க வாரம்பித்து விட்டன. "பெண்விலை" யென்ற "பெரும்பூதம்" வாயைத்திறந்து கெக்கலி கொட்டி—மீசையிலே கையைப் போட்டு—வயிற்றைத் தடவிக் கொண்டு உறுமுகின்றது. என் செய்வது? இதற்குப் பயந்த நமது சகோதரர்கள் பெரியகடன்பெற்று—தீராக்கவலையுடன்—அடிமையாகி—சதாத் துன்பத்தை அனுபவிக்க நினைக்கிறார்கள். ஏன் இந்தக்கஷ்டம்? இக்கொள்கை யெனனத்திற்கு? வேண்டாம்-வெறுத்து விடுவோம். பள்ளம் மேடு சகதி தண்ணீர் நொடிநிறைந்து வண்டிகளைக் குடஞ்சாயவைக்கும் சந்துப் பாதையை எட்டிக் கூடப்பார்க்க வேண்டாம். நமது ஊழிய சங்கத்தார் நேர்த்தியான வழியைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். அவ்வழியேபோகலாமல்லவா? "திருமணமுடித்துக் கொள்ள வேண்டிய வாலிபர்களே! நீங்கள் பயப்படவேண்டிய சங்கதி ஒன்றுங் கிடையாது. எதற்காகப் பயப்பட வேண்டும். எத்தனையோ இழிதொழிற் செய்யும் சாம்பிராணிகள் பயப்படட்டும். சில முழு ஆசாமிகள் சாதியைக் கெடுத்துவிட்டார்களென்று சொல்லுகிறார்களாம். சாதிக்கு இரங்குகின்ற இவர்கள் வேறு எதாவது செய்து கல்யாணஞ் செய்துவைக்கிறதுதானே? கையை யாரும்பிடித்துக் கொண்டார்களா? கண்ணையாரும் மூடிவிட்டார்களா?" "தின்கிறவன் திங்க திருவாலியான் தெண்டங் கொடுத்தானும்" இவர்களுக்கென்ன? விண்ணாரம்பேசிவிட்டு-மேன்மாடியில் காற்று வாங்குவார்கள். இந்தக்கசட்டுப் பேர்வழிகள் பேச்சைக் கேட்டு வீணுக் குழைத்து விழலுக்குஇறைத்தகாலமெல்லாம்போதும். சாஸ்திரமிருக்கிறது; தக்க ஆதாரமிருக்கிறது; அருமைவாய்ந்த நமது தனவைசியஊழியனை வாரந்தோறும் படிப்பவர்களுக்குத் தெற்றெனத்தெரியும். ஆனால் முரட்டுப் பேர்வழிகள் எப்படி வேண்டுமானாலும் பேசுவார்கள். இவர்கள் பேச்சுக்குக்காதுகொடுக்க இங்கேயாருமில்லை. இதுகிடக்கட்டும். பெரிதும் உணர்ந்த நமது வாலிபதீரர் ஆவணிமாதம் மணமுடித்துக் கொண்டு இன்பவாழ்க்கை வாழுகிறார். இனியென்ன? ஐப்பசிமாதம் வரப்போகிறது. நூற்றுக்கணக்கான-வீரமுள்ள—நமது சகோதரர்கள் கல்யாணம் முடித்துக் கொண்டு தம்பதிகளாக—இல்லறம் நடாத்தியின்பமுறும்—நல்வாழ்க்கை வாழப்போகிறார்கள். கண்ணாரக்கண்டு ஆனந்தமடையப் போகிறோம். வாயைத்திறந்துகொண்டு நிற்கின்ற பூதத்தின் வாயில் நிறைய மண்ணைப்போட்டுக் குத்த இதுநல்லமாதிரிவழி! பேஷ்!! இனி இந்தப் பெண்விலை என்ற பெரும்பூதம் என் செயும்? முக்காட்டை போட்டுக்கொண்டு, மூலைக்கு மூலை ஒளிந்து திரிந்துவிட்டுக் கண்காணாத விடத்திற்கு ஓடவேண்டியதுதான். கலியாணம் ஆகவேண்டிய நமது சகோதரர்களிற் பலர் திருமணப்பத்திரத்தில் கையெழுத்துச் செய்யக்கொஞ்சங்கூட பின்வாங்கவில்லையாம்; இதல்லவா சரி! இதல்லவாவீரம்!! இதல்லவா உண்மை!!!

---



## காந்தியடிகள் கடிதங்கள்.

### பிறர் குணத்தைக் கொள்.

க, சைத்ரேயவதி ச. ககசுடு.

அன்புள்ள மணிலாலுக்கு

என்னிடத்தில் ஏதேனும் குற்றங் காண்பாயாகில் அவைகளை நீ எடுத்துக்காட்டுவது நியாயமேயாகும். ஆனால் பிறரிடத்தில் குற்றங் காண்பதைவிட அவரிடத்தில் உள்ள குணங்களைக் கைக்கொள்ளுதலே உத்தமம் என்பது என் விருப்பம். மானிடராகிய நம்மிடத்தில் எல்லாக் குற்றங்களும் நிரம்பியிருக்கின்றன. ஆதலின் மாந்தருடைய குற்றங்களைக் களைந்து குணத்தைக்கொள்ளுதலே சால்புடைத்தாம். இந்தப் பழக்கத்தைக் கொள்ளுவாயாக. ஆனால் அதுவரை என்னிடத்தில் காணப்படும் குறைகளை எடுத்துக் காண்பிப்பதில் பின்வாங்காதே.

ஆற்றமுடியாதவைகளைப்பொறுத்துக்கொண்டிருக்கவேண்டியதுதான். உன் கடமையை நீ விடாமல் செய்துகொண்டு போவாயானால் அதனால் உனக்குத் திருப்தியேற்படும். நாம் நம் கடமையைச் செய்வோமாக. பிறர் அவர் கடமையைச் செய்யத் தவறினால் அதைப்பற்றி நாம் ஏன் கவனிக்கவேண்டும்? அதைப்பற்றி நினைப்பதும் துரோகமாகும்.

### வறுமையின் பெருமை.

சிறைச்சாலை,

பிரிடோரியா, உ௫-ந-ககூ0கூ.

அன்புள்ள மணிலாலுக்கு

நான் இப்பொழுது சிறையில் இருக்கிறேன். இங்கே அநேக புத்தகங்களைப்படித்துமுடித்துவிட்டேன். இப்பொழுது எமர்ஸன், ரஸ்கின், மாஸினி இவர்களுடைய நூல்களைப் படிக்கிறேன். கல்வி என்றால் ஒழுக்கத்தைப் படிப்படியாக விருத்தி செய்து கொள்வதென்றே நான் பொருள் கொண்டிருக்கிறேன். எழுத்திலக்கணத்தில் புலமைபெறுதல் கல்வியாகாது. நான் கொண்டுள்ள இந்த அபிப்பிராயம் இப்பொழுது படிக்கும் நூல்களால் ஸ்திரப்படுகிறது. கல்வி என்பதற்கு நான் கொண்டுள்ளதே உண்மையான பொருளாயின் நீ உயர்ந்த படிப்பைப் பெற்றுவருகிறாய் என்பது என் அபிப்பிராயம்.

உபநிஷதத்திற்கு ஸ்ரீமான் நாதுராமர் என்பார் எழுதிய முகவுரையில் காணப்பட்ட ஒரு வாக்கியம் என் மனதை அதிகமாகக் கவர்ந்துவிட்டது. முதலாவதாகிய பிரமசரியஆசிரமத்திற்கும் கடைசியானதாகிய சந்நியாச ஆசிரமத்திற்கும் எவ்வித வேற்றுமையும் இல்லையென்று அவர் கூறுகிறார். இதுதான் உண்மையிலும் உண்மை. ஒன்றுமறியாத பால பருவத்திலேயே—அதாவது பன்னிரண்டு வயதிற்குள்ளேயே—உண்மையான ஆனந்தங்களை அநுபவிக்கலாம். இவ்வனம் ஆனந்தத்தை அநுபவித்துக்கொண்டிருக்கும் பையனுக்கு வயது வந்துவிட்டால் குடும்பப் பொறுப்புகள் ஏற்பட்டுவிடுகின்றன. அந்தக் காலம் வந்துவிட்டால் ஒவ்வொருவரும் பேச்சிலும்செய்கையிலும் அடக்கமாயிருக்கப் பழக்கப்பட வேண்டியவர்களாகிறார்கள். இந்தப் பழக்கத்தை எவ்விதக் கஷ்டமும் இன்றி சுலபமாகவும் சந்தோஷமாகவும் அநுசரிக்க வேண்டும்.

இராஜகோட்டையிலிருந்தபிள்ளைகளிற் பலரின் ஞாபகம் எனக்கு இப்பொழுது வருகிறது. உன்னைவிட வயதில் நான் சிறியவனாயிருந்த காலத்தில், என் தகப்பனருக்குச் சிச்ருஷை செய்வதில் அதிக ஆனந்தங்கொள்வேன். எனக்குப் பன்னிரண்டு வயதான பிறகு என் சந்தோஷங்கள் பறந்தோடிப்போயின. உண்மையான குணங்களைக்கைக்கொண்டு ஒழுக்கமுள்ள வாழ்க்கையை நீ நடத்தி வருவாயாகில், கல்வியைப் பற்றி நான் கொண்டுள்ள அபிப்பிராயத்தை நீ பூர்த்திசெய்தவனாவாய். ஒழுக்கம் என்பது உன்னிடத்தில் மிகுதியாக இருந்தால், எந்த மூலை முடுக்குகளில் நீ சென்றாலும் உனக்குப் பிழைப்பு அகப்பட்டு விடும்; தன்னைத்தான் அறிதல் என்னும் வழியையும் நீ கண்டுபிடித்து விடலாம்.

இங்ஙனமெல்லாம் நான் கூறுவதனால், இலக்கியப்படிப்பை அடியோடு நிராகரித்துவிட வேண்டுமென்று நான் கூறுவதாகஎண்ணவேண்டாம். அவ்விலக்கியப் படிப்பைக் கற்றுக்கொள்ள நீ அவசரப்படக் கூடாதென்றே நான் கூறுகிறேன். அதற்குக் காலம் இருக்கிறது. பிறர்க்குச் சேவை செய்யக்கூடிய கல்வியை நீ முதலில் கற்றுக்கொள்ளவேண்டும்.

வறுமை என்பது நம்மை எதிர்நோக்கிக் கொண்டிருக்கிறது என்பதை நீமறந்துவிடாதே. இந்த உலகத்தைப்பற்றி நான் ஆராய ஆராயப் பணக்காரனுவதைவிட ஏழையாவதிலேயே ஒரு சந்துஷ்டி இருக்கிறதென்ற நிச்சயத்திற்கு வரவேண்டியவனாயிருக்கிறேன். செல்வத்தையும் செல்வாக்கையும் விட, அன்பும் இனிமையும் நிறைந்த வறுமையிலேயே அதிகஇன்பம் இருக்கிறது.

(ந-ம் பக்கத் தொடர்ச்சி)

### இறப்பதற்கேன் விசனம்?

ஜோஹான்னஸ்பர்க் உக—ரு—கக0அ

அன்புள்ள மணிலாலுக்கு

உன் கடிதம் கிடைத்தது. என்னைப்பற்றி அதிகமாகக் கவலைப்படாதே. என்னை அர்ப்பணம் செய்துவிடவேண்டியதுதான் என்று நினைக்கிறேன். கடைசி வரையில் தளபதி ஸ்மட்ஸ் பொய்நடிப்பு நடிக்க மாட்டாரென்றே நம்புகிறேன். இங்குள்ளஜனங்கள் பொறுமையை இழந்து வருகிறார்கள்.

ஜி—இறந்திருந்தால் நலமாயிருக்கும். நாம் ஏன் இறப்பதற்கு அஞ்சவேண்டும்? இந்த உலகம் அநித்தியமானது. அப்படி இருக்க நான் இறந்துவிட்டால் என்ன செய்வது என்று நீ ஏன்விசனப்படவேண்டும்? நான் இருக்கும் வரையில் என்னால் அநீதியானவை ஒன்றும் நடைபெறக் கூடாதென்று நீபிரார்த்தனைசெய்து கொண்டிருந்தால் அதுவே போதுமானது. நான் மோட்சத்தை அடையும்படியான நிலையை இன்னும் அடையவில்லை. இப்பொழுது நான் அடைந்துள்ள ஆத்மஞானப் பயிற்சி நிலையில் இறந்து விட்டால் அடுத்த ஜன்மம் எடுத்தவுடனே மோட்சம் கிடைக்கும் என்பது நிச்சயம்.

### உண்மையின் தன்மை.

அன்புள்ள—

பிளேக் நோயைப்பற்றி நீ கேட்கும்கேள்விகள் விநோதமாகவே இருக்கின்றன. இராஜகோட்டையில் முன்னொருமுறை பிளேக் வந்தபோது, ஊரைவிட்டு வெளியே போய்விடும்படி நான் ஜனங்களுக்குக் கூறியதுண்டு. அப்பொழுது அந்த அபிப்பிராயத்தைக் கொண்டிருந்தேன். இப்பொழுது அந்த அபிப்பிராயம் தவறு என்று தெரிகிறது. இதே மாதிரி என் அபிப்பிராயங்கள் பலவற்றை நான் மாற்றிக்கொண்டிருக்கிறேன். இங்ஙனம் மாற்றிக்கொண்ட போதிலும் என் நோக்கம் ஒன்றாகவே இருக்கும். உண்மையை அறிதலே என் நோக்கம். பிளேக் நோய் வந்து விட்ட காரணத்திற்காகவே, ஒருவன் தன் வீட்டைக் காலி செய்வதென்பது ஆத்மாவைப்பற்றிய அறியாமையேயாகும். இதனால், எந்தச் சந்தர்ப்பத்திலும் வீட்டைக் காலிசெய்யவே கூடாது என்று கொள்ளுதல் பொருந்தாது. நெருப்புப்பற்றியவீட்டைக்காலிசெய்ய வேண்டியதுதான். தேள்களும் பாம்புகளும் நிரம்பியிருக்கும் ஒரு வீட்டில் இருப்பதால் மரணத்தைஎதிர்பார்ப்பதாகும் என்று நினைத்தால் அந்த வீட்டைக் காலிசெய்ய வேண்டியது அவசியந்தான். ஆனால், தன்னை யறிந்த ஒருவன் ஆகாயத்தையே (வீட்டின்) மேற்கூரையாகக் கொள்வான்; தேள்களையும் பாம்புகளையும் தன் நண்பர்களாகக் கொள்வான். அந்த நிலையையடையாத நாம், உஷ்ணத்தினின்றும் குளிரினின்றும் பாதுகாத்துக் கொள்ள வேண்டி இந்த வீடுகளை வைத்துக்கொள்ளவேண்டும். இந்த வீடுகளில் ஏதேனும் ஆபத்துத்தோன்றினால் அவைகளைக் காலிசெய்துவிடும்படியாகவும் வைத்துக்கொள்ள வேண்டும். ஆயினும் "தன்னை அறியவேண்டும்" என்ற விருப்பம் எப்பொழுதும் நமக்கு இருக்கவேண்டும். பிளேக் நோய் பரவிய காலத்து ஸ்ரீமான் ............தன் வீட்டைப் பார்த்துக் கொள்ளும்படி தன் காரியஸ்தருக்குக் கட்டளையிட்டுவிட்டுப் போனார். இங்ஙனம் செய்தது ஒரு மனிதனுக்கு அழகல்ல. அந்த வீடு நெருப்புப் பற்றிக்கொண்டதானால் அந்தக் காரியஸ்தரும் அந்த வீட்டைவிட்டுப் போயிருப்பார். பிளேக் முதலான நோய்களைப் பொருட்படுத்தக் கூடாதென்று விரும்புகிறேன். முஸல்மான்கள் இத்தகைய காலங்களில் வீட்டைக் காலிசெய்வதில்லை கடவுளிடத்தில் நம்பிக்கை கொண்டு அங்கேயே இருக்கிறார்கள். இந்த நம்பிக்கையுடன் அவர்களுக்கு முன்னெச்சரிக்கையுமிருந்திருக்குமானால் மிக நன்றாயிருக்கும். நம் அங்குமிங்கும் அலைந்துகொண்டிருந்தோமானால் நம்மைவிட்டு பிளேக் போகும் என்று நினைப்பதற்கில்லை ஒரு நகரத்தில் பிளேக் நோய் உண்டானால், அதன் காரணங்களை ஆராயாமல், அதற்குப் பரிகாரங்களைத் தேடாமல், அந்த இடத்திலிருந்து ஓடிப்போய் விடுவதென்பது நம்முடைய பலஹீனத்தைக் காட்டுகிறது. நாமிருவரும் நேராகச் சந்தித்தால்தான் இதைப்பற்றி விரிவாகப் பேசமுடியும். இதைப்பற்றி விரிவாகச் சொல்ல முடியாததற்கு இரண்டு காரணங்கள் இருக்கின்றன. என்மனதில் உள்ளவற்றை எழுத முடியாதபடி வேலைத் தொந்தரவில் நான் அகப்பட்டுக் கொண்டிருக்கிறேன். மற்றும் என் கொள்கைகளுக்கும் அநுஷ்டானத்திற்கும் அதிக வேற்றுமைகள் இருக்கின்றன. பிளேக்கின் பயத்தினால் உன்னுடைய பெரியோர்கள் நகரத்தைவிட்டு வெளியே செல்லும்படி உனக்குக்கட்டளையிட்டால்,—அவர்களுடைய கட்டளை உன்னுடைய ஒழுக்க வாழ்க்கைக்கு மாறுபடாதிருக்கிற வரையில் நீ கீழ்ப்படிந்துபோக வேண்டியதுதான். மரணத்திற்கு அச்சப்பட்டல்லாது, உன் பெற்றோரை மகிழ்விக்க வேண்டி நீ சென்றால் அஃது உன்குற்றமாகாது. நம் பெற்றோர்களிடும் கட்டளைகளில் எதற்குக் கீழ்ப்படிவது என்பதை நாம் ஆராய்ந்து பார்க்கவேண்டும். அவசியமான காரணங்களைக் கொண்டே நாம் அவர்களுடைய கட்டளைகளை மறுக்கவேண்டும். அஃதன்றி அவர்களுடைய உள்ளத்தை எவ்விதத்திலும் புண்படுத்தலாகாது. பெற்றோரல்லாத பிற பெரியோர்களிடத்திலும் நாம் இங்ஙனமே தக்க காரணங்களைக் கொண்டு கீழ்ப்படியாதிருக்கலாம். சில சமயங்களில் நம் பெற்றோருடைய கட்டளைகளையும் கீழ்ப்படியாதிருக்கும்படியாக நேரிடும். என் தகப்பனார், திருடும்படி எனக்குக் கட்டளையிட்டால் நான் அவருக்குக் கீழ்ப்படிய மாட்டேன். நான் பிரமசரிய விரதம் அநுஷ்டிக்க வேண்டுமென்று விரும்புகிறேன் என்று வைத்துக் கொள்வோம். என் பெற்றோர்கள் அதற்கு மாறாகக் கூறினால் அவர்கள் கட்டளையை நான் மறக்கவேண்டியதுதான். எம்.........க்கும் ஆர்...... க்கும் அவர்களுக்கு வயதாகும்வரை விவாகம் செய்விப்பது சரியல்ல வென்று நான் நினைக்கிறேன். என் பெற்றோர்கள் உயிருடனிருந்து என் அபிப்பிராயத்திற்கு விரோதமாயிருந்திருப்பார்களாகில் நான் அவர்களுக்கு விரோதமாகவே கிளம்பியிருப்பேன்.

இது போதும் என்று நினைக்கிறேன் இன்னும் ஏதேனும் சந்தேகங்கள் தோன்றினால் எனக்கு மறுபடியும் எழுதவும். நீ நல்லவனென்று எண்ணியே இந்தக் கடிதத்தை எழுதினேன்.

### ஆத்மா அழியாது.

வணக்கமுள்ள சே——

இந்தக் கடிதத்தைப் பாதி ராத்திரியில் எழுதுகிறேன். என்னைப்பற்றி ஜாக்கிரதையாகஇருக்கும்படி சொல்லுகிறீர்கள். ஆனால் ஆத்மா இறப்பதுமில்லை; கொல்வதுமில்லை; கொல்லப்படுவதுமில்லை தேகத்தையே ஆத்மாவாக நினைத்து அதனால் நான் ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமென்று நீங்கள் கூறுகிறீர்களா? நான் எது விஷயத்தில் ஜாக்கிரதையாக இருப்பது? நான் என் ஆத்மாவை அறிய முயல்கிறேன். அதையறிய என் தேகத்தை விட்டுவிடப் போதிய பலம் வேண்டாமா?

நம்முடைய மத நூல்களில் கூறப்பட்டுள்ளவற்றிற்கு விரோதமாகவே நாம் வாழ்க்கையை நடத்துகிறோம். இத்தகைய வாழ்க்கையை நான் வெறுக்கிறேன். நமஸ்காரம்.

### சத்தியத்தின் வெற்றி

வெள்ளிக்கிழமை இரவு

அன்புள்ள எம்——

சத்தியத்தைக் கடைப்பிடித்தொழுகுவோர் கஷ்டத்தை அநுபவிக்க வேண்டியவரே. சத்தியத்திற்குப் பாடுபட்டவர் தேக சிரமப்படவில்லை என்பதற்கு ஓர் உதாரணங்கூடக்காட்ட முடியாது. தேக கஷ்டத்தினால், அந்தத் தேக கஷ்டத்தில் நம்பிக்கை இருக்கவேண்டும்-ஒருவிதமான சந்தோஷம் இருக்கிறது. இதைப்பற்றி நாம் சிந்திக்க வேண்டும் சத்தியம் எப்பொழுதும் வெற்றிபெறும். ஆசீர்வாதம்.

நவசக்தி.



## காந்தியடிகள் திருநாள்.

### காரைக்குடி.

நிகழும் புரட்டாசி மாதம் கஅ௳ புதன் கிழமை பகல் இரண்டு மணிக்கு, தனவைசிய ஊழியன் பத்திரிகாலயக்கட்டிடத்தில் காந்தியடிகளின் திருவுருவப்படம் அலங்கரிக்கப்பெற்று வழிபாடுசெய்து, அக்கட்டிடத்தின் முன்னர் சுமார் ஓராயிரம் ஏழைகட்கு அன்னமளிக்கப் பெற்றது. மாலை ரு-உ-மணிக்கு கொப்புடையம்மன் சந்நிதிக்கு எதிரிலுள்ள திருவீதிவழியாக, கொப்புடையம்மன் கோவிலைச்சுற்றி, அடிகளின் திருவுருவப்படம் அழகிய வண்டியில் வைத்து உலா வரப்பெற்று, கல்லுக்கட்டியின் மேல்கரையிலுள்ள பாடசாலையின் எதிரில் சொற்பொழிவு ஆரம்பமாயிற்று. ஏற்கனவே சொற்பொழிவின் நிமித்தம் செய்தி விடுத்திருந்த சிறந்த தேசபக்தரான திருவாளர், வ. வெ. சுப்பிரமணிய ஐயரவர்கள் முதலியோர் வரக்கூடவில்லையென்று செய்திவிடுத்துவிட்டனர். திருவாளர், வை. சுப்பிரமணிய ஐயரவர்கள் எழுந்து கம்பராமாயணப் பிரசாரகராகிய திருவாளர் மோ. வெ. கோவிந்தராஜ ஐயங்காரவர்களைத் தலைமை வகிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு மகாத்மாவைப்பற்றிச் சில பேசினார்கள். அதன்படி திருவாளர் ஐயங்காரவர்கள் தலைமை வகித்து முகவுரையாகச்சில பேசினார்கள். பின்னர் திருவாளர்களான பழ. நாராயணன் செட்டியாரவர்களும், பள்ளத்தூர் ராமனாதன் அவர்களும், ராய. சொக்கலிங்கம் அவர்களும் அடிகள் வைபவத்தைப்பற்றிச் சொற்பெருக்கிட்டார்கள். பின்னறை தலைவரவர்கள் மிக அழகாக முடிவுரை நிகழ்த்தினார்கள். அதன்பின் இரவு அ௨-மணிக்கு ஊர்வலம் ஆரம்பிக்கப்பெற்று, கீழச்சத்திரவழியாக முத்தாளம்மன் கோவில் மேல்கரையில் வந்து சிவன்கோவிலைச் சுற்றிக்கொண்டு தனவைசிய ஊழியன் பத்திரிகாலயக் கட்டிடத்திற்கு மிகுந்த குதூகலத்துடன் இரவுகூ௨-மணிக்கு வந்துசேர்ந்தது. ஊர்வலத்தின் போது படத்தின் முன்னர் மேளவாத்தியகோஷமும் பின்னர் தேசீயப் பஜனையும் முழங்கின. வந்துசேர்ந்தவுடன் தேசிய கீதங்களும் தேவார திருவாசகங்களும் ஓதப்பெற்று ஜேய், வந்தேமாதரம் முதலிய கரகோஷத்தினிடையே மங்களமாக முற்றுப்பெற்றது. இவ்விழா பல அன்பர்களின்பொருளுதவிகொண்டு நடைபெற்றது. என நமது நிருபர் எழுதுகிறார்.

### அமராவதி புதூர்

புரட்டாசி கஅ.

புதுக்குடியிருப்பு சிவன் கோவிலில் சாயந்திரம் ச மணிக்கு காந்தியடிகள் திருவுருவப் படத்திற்கு பூஜை நைவேத்தியம் செய்து ஏழைகளுக்கு அன்னமளிக்கப்பெற்றது. ருரு0 பெயர்களுக்கு மேல் போஜனம் செய்தனர். அதன் பின்னர் திருவாளர் பிச. சுப்பிரமணியன் செட்டியாரவர்களும், காரைக்குடி திருவாளர் அரு. சோமசுந்தரம் செட்டியாரவர்களும் திருவாளர் சொ. முருகப்பச் செட்டியாரவர்களும் நீண்டதோர் சொற்பெருக்கிட்டார்கள். மஹாத்மாவின் படத்தை வெகுஅழகாக ஒரு வண்டியில் அலங்காரம் செய்திருந்தது. பல அன்பர்கள் சூழ நாகசுரம் முழங்க கூமணிக்குப் பவனிவர ஆரம்பமாயிற்று. ஒவ்வொரு வீட்டிலும் விளக்குகள் ஏற்றிவைத்து தேங்காய் பழம் கற்கண்டு முதலிய, நைவேத்தியத்திற்கு வைக்கப்பெற்றிருந்தன. அநேகர் ஆலத்தி எடுத்தார்கள். க௨ மணிக்கு ஊர்வலம் முடிவுபெற்றது. ஜனங்கள் மிக அபிமானங்கொண்டு வேலைகள் பார்த்து உதவி செய்தார்கள் என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

## மதிப்புரை.

### சதாசிவப்பிர்மத்தின் அற்புத விருத்தாந்தம்.

இந்நூல் வேந்தன்பட்டி திருவள்ளுவர் வாசகசாலையாரால் திருவாளர் நா. சோமசுந்தரம் அவர்களின் பொருளுதவிகொண்டு வெளியிடப்பெற்றது. இது இற்றைக்கு நூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னிருந்த ஒரு பெரியார் திருவிளையாடல்கள் கொண்ட ஒரு சிறுநூல். இப்புத்தகத்திற் கூறப்பட்டிருக்கும் இவர் செயல் செயற்கரியதேயாகும். இதுவும் வேறு சில பிரசுரங்களும் மேலைச்சிவற்பட்டி தபாற்சாவடியைச் சேர்ந்த வேந்தன்பட்டி திருவள்ளுவர் வாசகசாலையில் இனாமாகக்கிடைக்கும். வேண்டுவோர் அரையணாத்தபால் பில்லை மாத்திரம் அனுப்புதல் வேண்டும்.

### கல்யாணி.

இது ஒரு தமிழ் நாடகம். இதனை வெளியிட்டவர் சென்னை, திருவல்லிக்கேணி பெரிய தெருவிலுள்ள "சிரவுதி" கம்பெனியார். இதன்விலை ரூ. (க) இந்நூலில் கடவுள் ஒன்றெனபதும் கல்யாணியின் கற்பின் திறமும் நன்றாகக் கூறப்பட்டிருக்கிறது, கதாநாயகியாகிய கல்யாணியின் செயல் கற்புக்கரசியாகிய சாவித்திரியின் செயலைப் பெரும்பான்மையும் ஒத்திருக்கிறது. வேண்டுவோர் வெளியிட்டவர்க்கெழுதிப் பெற்றுககொள்க!

### காணவில்லை

என்னுடைய சகோதரன் உ மாதங்களுக்கு முன் தேவகோட்டை காரைக்குடி முதலான இடங்களுக்கு ஈயப்பாத்திரம் விற்று வருவதாகச் சொல்லி அ0 ரூ பெறும் ஈயப்பாத்திரங்களைக் கொண்டு மதுரையிலிருந்து போனவனைக்காணோம். அவனிடமிருந்து நாளிது தேதி வரை ஒரு தகவலும் வரவில்லை. ஆகையால் நான் பெரிதும் பயப்படுகிறேன். என்மேல் கிருபைசெய்து அவனைப் பார்த்தவர்களாவது அல்லது அவனை வேலைக்கு வைத்திருப்பவர்களாவது. வேறெதவும் தகவல் தெரிந்தவர்களாவது உடனே எனக்குத் தெரிவித்தால் பெரும் புண்ணியமுண்டு

அவனுடைய-அடையாளமும் இத்துடன் எழுதியிருக்கின்றேன்:—வயது கஅ. நிறம் சிகப்பு. மூக்கு சப்பட்டை. முதுகின் கீழ் நடுவில் ஒரு ரூ. அகலம் சிகப்பு மச்சமுண்டு. ஜாதி மலையாளி; நாயர். கிராப் தலை. பெயர் ராகவன், ஊர் ஹரிப்பாடு, திருவனந்தபுரம் ஜில்லா.

தங்கள் ஊழியன்
நாராயண நாயர்,
c/o போலீஸ் சப் இன்ஸ்பெக்டர்
காரியாபட்டி,
அறப்புக்கோட்டை போஸ்ட்,

நாளென்செயும்! வினைதானென்
செயும்! எனை நாடி வந்த
கோளென்செயும்! கொடுங்கூற்
றென்செயும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்கு முன்னே
வந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்

தனவைசிய ஊழியன்,
காரைக்குடி புரட்டாசிமீ ௨௰௨

## தீபாவளியும், கதராடையும்.

தீபாவளி சமீபத்தில் வரப்போகிறது. அப்பண்டிகையன்று நமது ஹிந்துக்களனைவரும் கோடிபுனைவது வழக்கம். எத்துணை வறியராயினும் கடன்பட்டேனும் எவ்விதத்தும்கோடிபுனையாத ஹிந்துக்கள் அநேகமாக இரார். இப்பண்டிகை வந்துவிடுமானால், புடவைக்கடைகளை யெல்லாம் கண்கொண்டு மதிக்கமுடியாது. இப்பண்டிகையொன்றிற்கு மாத்திரம் இலட்சக்கணக்கான பணத்திற்கு அந்நிய ஆடைகள் நம்மவர்களாற் கொள்ளப்பெறுகின்றன. நமது நாடு விடுதலை பெறல் வேண்டுமானால், முதலில் அந்நிய ஆடையை ஒழித்தல் வேண்டுமென ஒப்புயர்வற்றவர் சொல்லுகிறார். அதனை நாட்டின் கணுள்ள அறிவாளிகளனைவரும் அங்கீகரித்து அதன்படி யொழுகுகின்றனர். அந்நிய ஆடைகளை வைத்திருப்பதுந் தோஷமென்று பல மேதாவிகள் தீக்கொளுத்தி விட்டனர். முழுமையும் நூல் சம்பந்தமேயின்றி ஜரிகையாலாய— நூற்றுக்கணக்கான விலைபெறத்தக்க, பீதாம்பரங்களை யன்றிப் பிறிதொன்றுமறியாச் செல்வச்சீமான்கள் கூட, அதனைவிடுத்து, நாட்டின் விடுதலை ஒன்றையே நாடி, தடித்த நூலாலாய கதராடை தரித்துக்களிப்பெய்துகின்றனர்.

ஒரு பெரிய நாடு—அதினும் உலகத்தில் எந்த நாடும் பெற்றிராத, இனிப்பெறவும் முடியாத, மட்டில்லாப் பெருமை பெற்ற நாடு—பல அவதார மூர்த்திகளைக் கண்டநாடு— நீதிதவறாது செங்கோல் செலுத்திய மன்னவர் பலர் மல்கியநாடு, அடிமையினின்றும் விடுதலை பெறுதற்கு இக்கதராடையே காரணமென்று, இப்பூமண்டலத்திற்கே ஒரு தனிப் பெரியாரென்று உலகத்தாரால் தீர்மானிக்கப்பெற்ற ஒரு மகான் கூறுவாரானால், மக்களாகப் பிறந்தோர் இப்புண்ணியக் கதராடையை எவ்வளவு விரைவில்கைக்கொள்ளல் வேண்டும்? "இதனலா நாடு விடுதலைபெறப்போகிறது" எனத்தர்க்கம் பேசுவோரும் உண்டென்பதை நாமறிவோம். பெரியார்கள் வாய்மொழிக்கு நேராகப் பதத்திற்குப் பதம் பொருள் செய்து கொண்டு இடர்ப்பட்டுழல்தல் ஆகாது என நமது பெரியாரே ஓரிடத்திற் கூறியிருப்பது போல, அங்ஙனம் மருளுதல் அறியாமை. உலகத்தை நல்வழிப் படுத்தத் தோன்றிய மேலோர்கள் உலகின் நிலைநோக்கிப் பல விதக்கருத்துக் கொண்டு பல புரிவார்கள். அவர்கள் செயலையும் சிந்தையையும் சாமான்னியர்கள் அறிந்து கொள்ளுதல் சிரம சாத்தியமான காரியம். அவர்கள் சொல்வதில் நம்பிக்கையில்லாதவர் ஒருகால் அதில் தீமை யேதேனுமிருப்பதாகத் தங்கட்குத் தோன்றின் அதனைச் செய்தல் வேண்டாம். கதராடை உடுப்பதால் ஸ்வயராஜ்யம் வாராதென்றே வைத்துக் கொள்வோம். ஆனால், அவ்வாடை கட்டுதலால் தீமை ஒன்றுமில்லையல்லவா? கதராடை உடுப்பதில் தீமை யுண்டென்று மனிதஅறிவுள்ளவர்நிச்சயமாகக்கூற மாட்டார். நமக்குத் தீமை இல்லையென்பது நிச்சயமாகத் தெரிகிறது. ஒரு பெரியார் "ஸ்வராஜ்யம் இதனுலேயே கிடைக்கும்; இதுவே எனது இப்பிறப்பின் பயன்" என்று கூறுகிறார். அப்படியிருக்க ஏன் நாம் அப் பெரியாரின் எண்ணத்தைப் பூர்த்திசெய்ய முந்துதல் படாது? காரியத்தை விடுத்து வீண் விவாதங்கள்செய்வதினுலேயே நமதுநாடு இன்றைய நிலையிலிருக்கிறது. நமது உலக சிரேஷ்டர் சொல்வது தவறுகத் தங்கள் அறியாமையால் தோன்றினும், எப்படியும் உலகில் பெரியார் எனப் பேரறிஞர்களாலேயே அவர் நிச்சயிக்கப்பட்டு விட்டமையான், நம்மைக் காட்டினும் அவர் அறிவாளியே யாதலால் அவர் சொல்லை ஏன் கேட்டு நடத்தல் படாது? இதனுல் நமது நாட்டினின்றும் வேற்று நாடுகட்கு ஏற்றி யனுப்பப்பெறும் செல்வப்பொருள் நமது நாட்டிலேயே தங்குமென்பதை அங்கீகரிக்காதவரும் உளரோ? நமது ஏழை மக்களிற் பலர் இக்கதராடையாற் பிழைப்பரென்பதை மறக்கவும் முடியுமோ? பொருளாதாரத்தையும் ஏழைகள் பிழைப்பையும் கருதியேனும் இக்கதருடை அணிதல் ஆகாதா?

சிறிது கனமாயிருந்தா லென்ன? நாட்டின் நன்மையின் பொருட்டுச் செயற்கருந் தியாகஞ்செய்தோர் சந்ததியிற் பிறந்தும், மிகப்பெரிய பலனை அளிக்கத் தகுந்த இச்சிரமமில்லாத செயலைச் செய்தற்குக்கூட நாம் பின் வாங்குவோமானல் நமது நாடு எப்பொழுதுகதிமோக்ஷம் அடையப்போகிறது?

உண்மை யிந்தியராகப்பிறந்த ஒவ்வொருவரும், இந்தியர்களால்நூற்று நெய்யப்பெற்ற கதருடையையே யணிதல் வேண்டும். ஒரு காலும் அந்நிய ஆடைகளைக் கையினுல் தொடுவதுமில்லை யென்ற விரதந்தாங்குதல் வேண்டும். சர்வ சாதாரணமான ஒரு ஆடை விஷயத்தில் இச்சிறிய விரதந்தாங்க முடியாதவர், நினைத்தற்குமரிய மகா பெரிய விரதங்களையெல்லாம் தாங்கிய வீட்டுமராதியோர் சந்ததியில் வந்த இந்தியர்கள் என்று எப்படிக் கூறிக்கொள்ளமுடியும்? நமது புண்ணியத் திருநாட்டில் பெண்பிள்ளைகள் கூட எவ்வளவோ பெரிய பெரிய விரதங்களையெல்லாம் தாங்கி வாழ்ந்தனர். இச்சிறிய விரதந்தாங்குதற்கு ஆடவர்களாற் கூட முடியவில்லை யென்றால் இதைக் காட்டினும் வெட்ககரமான காரியம் பிறிதொன்றுண்டோ?

இத்தீபாவளிக்கென அந்நிய நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பெற்றிருக்கும் ஆடைகளில் ஒன்றுகூடச் செலவழிய விடப்படாது. அந்நியஆடைகளை வரவழைத்துநாட்டிற்குத் துரோகம் செய்யும்புடவைக் கடைக்காரர்கட்குப் புத்தி கற்பித்துவிடல் வேண்டும். தீபாவளியை முன்னிட்டு ஊர்கடோறும் தெருக்களையடைத்துப் போடப்பட்டிருக்கும் பெரிய பெரிய கொட்டகைகட்குக் கொடுத்த பணங்கூட வியர்த்தமாகப்போகும்படி செய்துவிடல் வேண்டும். தீபாவளியன்று வீதிகள் தோறும் கதர்மணக்கவேண்டும். ஆடவர்பெண்டிர்அனைவரும் புண்ணியக் கதருடை புனைந்து வீதிகளில் உலாவுவதை நாம் கண்ணாரக்கண்டு மகிழுதல் வேண்டும்.

எங்கும் கதர் மணக்கும் நாள் எந்நாளோ, அந்நாளேநம்பொருட்டுத் தவஞ்செய்யும் பெரியார் மனமகிழும்நாள்; அந்நாளே நமது நாடுவிடுதலையடையும் நன்னுள். அந்நாளைச் சீக்கிரத்தில் தோற்றுவிக்குமாறு ஆண்டவனை வேண்டுகிறோம்.

## இடி முழக்கம்.

### "பணம்"

திருசிராப் பள்ளியினின்றும் 'பணம்' என்றபெயரோடு புதிதாகத் தோன்றியுள்ள இவ்வாரப் பத்திரிகையின் ஐந்து இதழ்கள் வரப்பெற்றோம். இப்பத்திரிகை தேசியமகாசபைக் கொள்கையைத் தழுவியதென்றே தெரிகிறது. இதனை யாவரும் ஏற்றுப்படிக்கவிரும்புகிறோம். இதன் ஆண்டுச்சந்தா ரூ. (௫)

### "சமரஸபோதனி"

தஞ்சையினின்றும் வாரம் ஒருமுறையாக வெளிவந்த இப்பத்திரிகை இதுபோழ்து வாரம் இருமுறையாக வெளிவருகின்றமைபற்றி மகிழ்கின்றோம். பத்திரிகைகள் விர்த்தியாகுங்காலமே நாடு முன்னேற்றமடையுங்காலமாதலால் இருக்கும் பத்திரிகைகள் இன்னும் விர்த்தியாகவும் புதுப் பத்திரிகைகள் பல தோன்றவும் வேண்டுவதே.

### ஆத்திசூடி.

இவ்வார முதற் பக்கத்தில் மூன்றாவது பத்தியில் இருபத்திரண்டாவது வரியில் "செய்பவளாகிய" என்றிருப்பதை "செய்யவளாகிய" என்றும், அதே பத்தியில் முப்பத்திநான்காவதுவரியில்"அளித்ததாகவு" என்றிருப்பதை"அணித்தாகவு"என்றும் திருத்தி வாசிக்க! முன்னரெழுதிய ஆத்திசூடிக் கட்டுரைகளினும் நாமில்லாத சமயங்களில் சிற் சில பொருட்பேதமான பிழைகள் நேர்ந்திருக்கின்றன. இயல்பாக நேரும் சிலசில எழுத்துப்பிழைகளு மிருக்கலாம். ஆத்திசூடி முற்றுப்பெற்று ஒருகால் புத்தகவடிவமாக வர நேருமானல்அப்பொழுதுதிருத்தத்தோடு வெளிவருதல் கூடும்.

## உள்ளூர்ச் செய்தி

நவராத்திரி:—இவ்வுத்ஸவம் இவ்வூரிலுள்ள எல்லாக்கோவில்களிலும் கொண்டாடுவது வழக்கம். இவ்வூரில் கோவில்களதிக மாதலால் எல்லாக் கோவில்களுக்கும் அலங்காரங்களைக்கண்டு வருவதற்குச்செல்லும் ஜனங்கள் ஒரு கோவிலிலிருந்து மற்றொரு கோவிலுக்குப் போவதற்கும் வீடுகளிலிருந்து வருவதற்கும் அநேகமாக வீதிகள் முழுமையும் வழக்கம்போல பிரகாச விளக்குகள் தொங்கவிடப்பட்டிருந்தன. ஆலயங்களில் உலக நடைக்கேற்ப அலங்காரங்கள் செய்யப் பட்டிருந்தன. ஆனல் சிலஊர்களில் தெருக்கூத்து யாதிரி திரை முதலியன வெல்லாம் போட்டு சின் ஜோடிப்பதுவழக்கமாம். இங்கு அது இல்லை.

* * *

விஜயதசமி:—விஜயதசமி யன்று அம்பு போடுவதில் இவ்வூர் மிகவும் பேர்பெற்றது. நான்கு சுவாமிகள் ஓரிடத்தில் அம்பு போடும் காட்சி மிக அழகாகவே யிருக்கும். இதற்கு நீண்ட தூரங்களிலிருந்தும் ஏராளமான ஜனங்கள் வருவார்கள். இவ்வாண்டினும் அங்ஙனமே வந்திருந்தன ரெனினும், இதற்கென வந்தவர்கள்கூட இதனைப்பார்க்க முடியாது போயிற்று. காரணமென்ன? மழைவந்துவிட்டது. ஆனல் இரவு எழுமணிவரையும் மழை யில்லை. அதற்குள் மிகச் சிறப்பாக அம்பு போட்டிருக்கலாம். அங்ஙனமில்லை. நம்மவர் வழவழப்புத்தெரிந்ததுதானே! பிறகு மழை வந்தவுடன் பெருமாள் கோவிற் சாமிக்கெனத்தனியேமகா நோன்புப் பொட்டலில் அமைக்கப் பெற்றிருந்த கொட்டகையில் அதனைஇறக்கிவைத்து விட்டார்கள். ஏனைய சுவாமிகள் மழைப்பாதுகாப்புக்கூடு போட்டுச் சிறிது நேரம் நிறுத்திவைக்கப் பெற்றன. ஆனல் மழை விட்டபாடில்லை. வரவர அதிகரித்தது. ஏனைய சுவாமிகட்கு அப் பொட்டலில் மழைக்கொட்டகை அமைக்கப்பெறவில்லை. ஏனெனின், சிவன்கோவில் சமீபத்திலிருப்பதால் மழைவரும்பொழுது மூன்று சுவாமிகளையும் அங்கு கொண்டுபோய்வைத்துவிடலாமென்று கருதியே (பெருமாள்கோவிற் சுவாமிசிவன் கோவிலுக்குள் நுழையக் கூடாதென்பது அவர்கள் சட்டமாதலால் அதற்கு அவர்கள் கீற்றுக்கொட்டகை போட்டுவிடுவது வழக்கம்) அதுபோல மூன்று சுவாமிகளும் சிவன்கோவில் கொண்டுவந்து வைக்கப் பெற்றன. வருணபகவான் இரவு ௧௧-மணி வரையும் ஓய்ந்தாரில்லை. ஜனங்களெல்லாம் வீடுகட்குச் சென்றுவிட்டனர். பிறகு அதற்கு மேல் அம்புபோடப் பட்டது. அடுத்த ஆண்டுமுதல் காலாகாலத்தில் அம்புபோட ஏற்பாடுசெய்வார்களானல் ஜனங்கட்குச் சவுகரியமாக விருப்பதோடு சிறப்பாகவும் நடைபெறும்.





## தந்திச் செய்தி.

பினங்கு புரட்டாசிமீ ௧௧உ

| | |
|---|---|
| மதராஸ் உண்டியல் விலை | நூற்று எழுபத்தெட்டு |
| ஈயம் விலை | எண்பத்தொன்று |
| ரப்பர் விலை | முப்பத்தி நான்கு |

ரெங்கூன் புரட்டாசிமீ ௧௧உ

| | |
|---|---|
| உண்டியல் விலை | ௧௭௮ |
| வெள்ளி | ௧௫ |
| தங்கம் | ௩௧—௧௨—0 |
| பவுன்விலை | ௧௭—௫—0 |
| தவணைவட்டி | 0—௧—0 |
| நடப்புவட்டி | 0—௧—௩ |
| பெரிய மில் அரிசி | ௪௩௫ |
| சிறிய மில் அரிசி | ௪௮0 |
| துவரை | ௪௧௫ |
| கடலை | ௪00 |
| உளுந்து | ௫௩0 |
| செகப்பு மொச்சை | ௨௮௫ |
| நெல் | ௨00 |

## பொதுச் செய்தி.

வலையபட்டி:—இவ்வூர் சரஸ்வதி விலாச வாசகசாலை மாணவ மாணவிகளால், கச்சேரிக் கூடத்தில் இம்மாதம் ௧௨உ பகல் ௨-மணி முதல் ௬-மணிவரை உபந்நியாசங்களும் சம்பாஷணைகளும் நடத்தப்பெற்றன என வீர. அ. இராமனாதன் எழுதுகிறார்.

⁂

எப்போ:—இவ்வூரில் ஐம்பது வெள்ளிப்பங்குகள் நாற்பது சேர்த்து, தனவைசியர் கம்பெனி என்ற பெயருடன் தனவைசியர் வசிக்கும் பெல்பீல்டுத் தெருவிலுள்ள ௭௭-வது எண்ணிடப் பெற்ற இல்லத்தில் ஒரு வர்த்தகசாலை ஆவணிமீ ௨௩உ திறக்கப் பெற்று நன்கு நடைபெற்று வருகிறது என ஒரு நிருபர் அறிவிக்கிறார்.

⁂

வேந்தன்பட்டி தனவைசிய வாலிபர் சங்கக்கூட்டம்:— இக்கூட்டம் நாளிது புரட்டாசிமீ ௧௰உ மாலை ௫-மணிக்கு மேலச்சிவற்பட்டி சொ. பழனியப்பசெட்டியாரவர்கள் தலைமையிற் கூடியது. கடவுள்வாழ்த்துப்பாட, தலைவரவர்கள்முன்னுரையாக "நமதுகடமை" என்பதற்குச்சான்றாகப் பல அரிய மொழிகளையும், ஷை யூர் கணேசர் செந்தமிழ்க் கலாசாலை மாணவர் ஸ்ரீ பட்டாபிராமராஜு அவர்கள் "பக்தி" என்ற அரிய விஷயத்தையும் வெ. சி. பழ. பொய்சொல்லா மெய்யப்ப செட்டியாரவர்கள் "ஊக்கமது கைவிடேல்" என்ற விஷயத்தையும் நனிபயன் விளையவும் உருக்கமாகவும் உபந்நியசித்தார்கள். பின்னர் தலைவரவர்களின் இனிய முடிவுரையுடன் வந்தனோபசாரம் சொல்லப்பெற்று ௬-௩௰மணிக்குச்சபை இனிது நிறைவெய்தியது என்று குப. அரு ந. நடராஜன் எழுதுகிறார்.

⁂

கொழும்பு:—பர்மா நாட்டுக் கோட்டைச் செட்டியார் சங்கக் காரியதரிசியும், கடியாபட்டி தனவைசிய வாலிபர் சங்கத் தலைவருமாகிய திருவாளர் சு. பழனியப்பா அவர்கள் இவ்வூர் இந்தியவாலிபர் சங்கத்தின் சார்பில் அஉ பிற்பகல் "ஒற்றுமை" என்னும் விழுமிய பொருள் பற்றியும், நகரத்தார்கள் சார்பில் ௯உ மாலையில் "சமூக சீர்திருத்தம்" என்ற பயன்பெறும் அரிய பொருள் பற்றியும், மிக விரிவாயும், அழகாயும், பல சிறந்த கொள்கைகளைத் தாங்கி அழுத்தமாய் வற்புறுத்திக் கூறினார்கள். ஒவ்வொரு நாட் கூட்டத்திற்கும் திரளான மக்கள் வந்து கேட்டின்புற்று அன்னாருடைய பொதுஜன சேவையையும், சமூக நலங்கருதிய உழைப்பையும், பிறபல ஆற்றல்களையுங்கண்டு பெரிதும் பாராட்டி நன்றி கூறிப் பெருமைப் படுத்தியதோடு, பலரும் அக்கொள்கைகளை யெல்லாம் தழுவுவதாகவும் தெரிகிறது. என, வே. மீனாட்சிசுந்தரன் எழுதுகிறார்.

⁂

அரிமழம்:—புரட்டாசிமீ ௪உ இவ்வூரில்மாலை ௪-மணிக்கு ஆங்கிலப்பாடசாலையில் திருவாளர் சி. பெ. கா. பெரியகருப்பன்செட்டியாரவர்கள் தலைமையில் மாணவர்களாகிய அ. அண்ணாமலை, அ. சடையப்பன், ராம. அண்ணாமலை, மு. சின்னக்கருப்பன் ஆகிய இவர்கள் முறையே—"தன்னடக்கம்" "இனியவை கூறல்" "காலந்தவறாமை" "கடவுள் அருவமா? உருவமா?" யென்னும் விஷயங்களை மிக உருக்கமாகப் பேசினார்கள். மாணவி கோகிலம் என்னும் பெண்பால் "ஜீவகாருண்யம்" என்னும் விஷயத்தையும் தாம் நடக்கவேண்டிய முறைபற்றி ஆங்கிலத்தில் மூன்று பாடல்களாகவும் இனிமையாகப் பாடியது வியக்கத்தக்கது. பின்பு ௫-வயதுள்ள லெக்ஷ்மி யென்னும் பெண் "தாயிற் சிறந்தொரு கோவிலுமில்லை" யென்னும் விஷயத்தை நன்றாய்ப் பேசிற்று. பின்னர் பெண்பாடசாலை மாணவிகளால் "பேய் பேய்" யென்னும் சம்பாஷணை பலரும் நகைக்கும்படியாகப் பேசி முடிக்கப் பெற்றது. என, மு. ராமனாதன் எழுதுகிறார்.

⁂

கோப்பனாபட்டி:—புரட்டாசிமீ ௧௰உ யன்று இவ்வாசகசாலையின் ௧௩-ம் கூட்டம், உலகம்பட்டி ஞானசம்பந்த வாசகசாலையின் காரியதரிசி ஸ்ரீமான் பழ. சிவராமன்செட்டியார் தலைமையில் பின்னேரம் ௩-மணிக்குக்கூடியது. வந்தனோபசாரப் பத்திரம் வாசித்துக்கொடுக்கப்பெற்றதும், தலைவர் முகவுரை கூறியபின், "இல்லற தர்மம்" என்னும் விஷயம் ராம. காசிவிஸ்வனாதன் செட்டியாரால் வாசிக்கப்பெற்றது. திருவாளர்களான மு. இராமனாதச் செட்டியாரால் "நட்பிற் குரியவர்யார்" என்ற விஷயமும் பழ. சுப்பய்யா செட்டியாரால், "பலி மறுத்தல்," என்ற விஷயமும், அ. இலக்குமணச் செட்டியாரால் "ஈகை" யென்றவிஷயமும், ராம. காசிவிஸ்வனாதச் செட்டியாரால் "எங்கு வந்தோம்" என்றவிஷயமும் மு. திருப்பதி, நா. மு. நாகப்பன் என்ற மாணவர்களால் "இம்மை இன்பம் மறுமையின்பம்" என்ற விஷயத்தை சம்பாஷணைரூபமாகவும் மிகஅழகாய்உபந்யசிக்கப்பெற்றன. தலைவர் விரிவானமுடிவுரையோடு ௬-மணிக்கு இனிது நிறைவெய்தியது என்று உபகாரியதரிசி ராம. காசிவிஸ்வனாதன் எழுதுகிறார்.

⁂

மூவாறு "மகா கும்பாபிஷேகம்.":—இவ்வூரில் நகரத்தாரவர்களால் அமைக்கப்பெற்றுள்ள திவ்வியாலயத்தில் ஸ்ரீமூம்மூர்த்தி விநாயகப் பெருமானுக்கும் ஸ்ரீசுப்பிரமணியப் பெருமானுக்கும் நிகழும் ஆவணிமீ ௨௩உ பகல் ஒரு மணிக்கு "மகா கும்பாபிஷேகம்" மிகச் சிறப்பாக நடந்தேறிற்று. அக்காக்ஷியைப் பார்க்க அயலூரிலிருந்து ஏராளமான ஜனங்களும் நகரத்தாரவர்களும் வந்திருந்தார்கள். அவ்வமயம் மொத்தம் நாலாயிரம் ஜனங்களிருக்கலாம். அவ்வளவு ஜனங்கட்கும் அன்புடன் அன்னமளிக்கப் பெற்றது. அன்றிரவு ௭-மணிக்கு ஸ்ரீகுகப் பெருமான் ரதாரூடராய் மயில் வாகனத்தாரோகணித்து மேளவாத்தியமும், மலாக்கா, மாணவர்களின் தேவாரக் கோஷ்டியும்; இவ்வூர் ஸ்ரீமான். முத்தையா செட்டியாரவர்களுடைய மாணவர்களின் தேவாரக்கோஷ்டியும், பத்துவயதுள்ள இரண்டு சிறு மாணவர்களின் நடனங்களும்முழங்க நானாவித வைபவங்களுடன் பல பக்தர்கள் புடைசூழ ஆனந்த பரவசத்துடன் திரு உலாக்கொண்டு கடற்கரைத்திடலில் பதினாயிரம் ஜனங்களினிடையினின்று அந்த அ௦-மணிமுதல் பதினொரு மணிவரை அதிவிமரிசையாக நடந்த வாணக் காட்சியைப்பார்த் தருள்சுரந்து தனவைசியர்கள் வசிக்கும் "சாலன் மகாராணி" வீதியின் வழியாக, பன்னிரண்டுமணிக்கு தமது இரத்தின சிம்மாசனத்திவ்வியாலயத்திற்கு வந்து சேர்ந்தருளினர். அயலூரிலிருந்து விஜயஞ்செய்திருந்த நகரத்தாரவர்கட்குஜாகைக்கெனத் தனியே ஏற்படுத்தியிருந்த ஓர் பெரிய கட்டிடத்தின் நடுஹாலில் ௨௩உ காலை ௧௦-மணிக்கு ஒரு மகா சபை கூடிற்று. அவ்வமயம் மலாக்கா ஸ்ரீமான், சுப. அ. கு. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் அக்ராசனத்தில் ஷை யூர் ஸ்ரீமான், உ. அருணாசலம் செட்டியாரவர்கள் "இன்பம்" என்ற விஷயத்தையும் சிரம்பான் ஸ்ரீமான். ராம. மு அ. பழனியப்ப செட்டியாரவர்கள் "சங்கம்" என்ற விஷயத்தையும் சொற்பெருக்கிட்டார்கள். தலைவரவர்கள் தக்க முடிவுரை கூற, சபை இனிது நிறைவெய்தியது. முன்னும் பின்னும் கிட்டங்கிகளில் நடந்த விருந்துகளும் சுத்த போஜனமாகவே இருந்தன. மகா கும்பாபிஷேகச் சாப்பாட்டு விசாரணைப் பொறுப்பை மலாக்கா நகரத்தாரவர்கள் அன்புடன் ஏற்றுக்கொண்டு ஒவ்வொருவரும் அக்கரையோடு நின்று சந்தோஷ ஆரவாரங்களுடன் அதிவிமரிசையாக உபசரித்தார்களெனபது பலராலும் போற்றத்தக்கது. என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

⁂

தேவகோட்டை பழ. செ. சிவன் கோவில்:—இவ்வூர் ஷை கோவிலில் நவ ராத்திரி உத்ஸவத்தை முன்னிட்டுத் திருவிளையாடற் புராண ஐதீகப்படி தினசரி ஸ்வாமிக்கு அலங்காரம் செய்து உருத்திராக்ஷ பீடத்தில் சக்தி சமேதராய்



எழுந்தருளியிருந்தது யார்மனதையும் கவரத்தக்கதாயிருந்தது. கொலு மண்டபத்தில் தமிழ் மறையாகிய தேவாரம் ஓதும் பிள்ளைகள் பாடுகிற திருத்தாண்டகம்—திருப்புகழ்— பிள்ளைத்தமிழ்— முதலியவைகள் தெரிசனத்திற்குச் செல்பவர்களை அன்புவசப்படுதுவதற்கு அறி குறிகளாயிருந்தன. ஷை ஆலயவழி பாட்டிற்குரிய கார்யங்களில் பழ. செ குடும்பத்தார் எடுத்து வரும் சிரத்தை போற்றத்தக்கதென்று கண்டானந்தங் கொண்டோன் எழுதுகிறார்—

⁂

கீள்ளான் தனவைசியர் சங்கம்:—இன்றுஇச்சங்கச்சார்பில்மாலை ௪-௩௰மணிக்கு திருவாளர் கா. கந்தய்யாபிள்ளை அவர்கள் அக்ராசனத்தில் சிரஞ்சீவிகளான ஆ. முத்துராமன், ராம. நாராயணன், கா. சடையப்பன், கரு. ஆவுடையப்பன், சோம நாச்சியப்பன், ராம. சோவிந்தன், வெ. சோமசுந்தரம், அழ. இராமசாமி என்ற அன்பர்கள் "கல்விச்சாலை, சூது, கற்பு, தர்மம், செல்வம், பத்திரிகாபிமானம், செய்ந்நன்றி அறிதல், இன்பம்" என்ற விஷயங்களை முறையே வெகு இனிமையாகச் சொற்பெருக்கிட்டார்கள். அக்ராசன ரவர்களால் தக்க முடிப்புரை கூறப்பெற்று ௬ ௩௰ மணிக்குச் சபை இனிது நிறைவெய்தியது என்று காரியதரிசி அறிவிக்கிறார்.

⁂

கண்டனூர்:— இவ்வூர் வித்தியாசாலை மாணவர்கள் கிலுக்கி யெடுத்த தினமாகிய நாளிது புரட்டாசிமீ ௪உ சிவன்கோயிற் கொட்டகையிலும், அம்புபோட்ட தினமாகிய ௧௪உ சத்திரதது முன்மண்டபத்திலும், "மாமனாக வந்தருளிய திருவிளையாடலை" நாடகரூபமாக நடத்திக்காட்டினார்கள்.

மகார் நோன்பை முன்னிட்டு, பரஞ்சோதிமுனிவர் வாக்கை அனுசரித்து, மூற்கால வழக்கப்படி பக்தி முதலிய அரிய விஷயங்களையும், நியாய சபையின் உண்மைச் செயலையும், முக்கியமாகக்கொண்டு (இக்காலத்துப்பெரும்பாலும்நடைபெறும் அநாகரீக வழக்கங்களை அறவே யொழித்தும்) மாணவர்களுக்குப் பழக்கப்பெற்று நடத்தப்பெற்றது.

இவ்விருதினங்களிலும்மிகுதியானஜனங்கள் கண்டு களித்தனர். இதைக் கண்ணுற்றவர்களில் பெரும் பாலார், இவ்வித்தியாசாலையின் படிப்பையும் நற்பழக்கங்களையும் மிகப்பாராட்டினார்கள். என, காசிவிசுவநாதன். எழுதுகிறார்.

## விளம்பரம்.



## நமது கடமை.

சகோதரர்களே!

கடல்சூழ்ந்த இந்த உலகத்திலே மக்களாகப் பிறந்தோர் செய்யவேண்டிய கடமைகள் பலவற்றையும் யாவரும் எளிதில் உணரும்படி எடுத்துக் கூறுவதற்குப் போதிய அறிவும் ஆற்றலும் கல்வியும் அடையப் பெறாத சிறியேன் நமதுகடமை என மகுடமிட்டு இக்கட்டுரை வரைவதின் காரணம் யாதெனின், தற்காலத்தில் மிக முக்கியமாகச் செய்யவேண்டிய கடமைகளைப் பெரும்பாலோர் சிறிதுமுணராது வாளாவிருக்கின்றமையாலென்க!

நமது முன்னோர்கள், வாழ்க்கையை நன்கு நடத்துவதற்கு அநேக நூல்களின் வாயிலாக நாம் ஆற்றவேண்டிய கடமைகளை யுணர்த்திச் சென்றனர். தற்காலத்தில் அக் கடமைகள் யாவற்றையும் நன்குணர்ந்து அனுட்டிப்பதற்குப் போதிய சக்தி நம்மிடத்திலில்லை. ஏனெனின், நமது நாடு மிகுதியும்வறுமையடைந்து விட்டது. நமது நாட்டு ஜனங்களிற் பலர் உண்ண உணவின்றியும் உடுக்க உடையின்றியும் வசிக்க வீடின்றியும் மிகத் துன்புறுகின்றனர். கடமைகளை உணர்வதற்குத் தகுந்த கல்வி போதிக்கப்படுவதில்லை. நமது தேசம் மதம் பாஷை முதலியயாவும் மிகத் தாழ்ந்த நிலைமைக்கு வந்து விட்டன. ஒழுக்கம் குன்றிவிட்டது. இந்நிலைமையில் நமது முன்னோர்கள் கூறிப்போந்தபடி கடமைகள் யாவற்றையுமுணர்ந்து ஆற்றுவதியலாததேயாகும். ஆதலால் அன்பர்களே! நமது நாடு பண்டைய நிலையை அடைய வேண்டுமானால் — கல்வி அறிவுஒழுக்கங்களில்சிறந்துவிளங்க வேண்டுமானால்—நமதுமதம் தேசம் பாஷை முதலியன வளர்ச்சியடைய வேண்டுமானால் — நமது ஜனங்கள் வயிறார உண்டு சுகமான வாழ்க்கையைப் பெறவேண்டுமானால், நமது நாடு சுயராஜ்யம் பெறுதல் வேண்டும். அதன் பொருட்டுத் தங்கள் உடல் பொருள் ஆவி மூன்றையும் பாரதமாதாவிற்கே அர்ப்பணம் செய்து, தேசத்திற்கு உழைப்பதே தங்கள் பெரு நோக்கமாகக்கொண்டு சாந்த மூர்த்திகளாய் விளங்கும், மகாத்மா, லஜபதி, தேசபந்து முதலிய தலைவர்கள் நெடுநாளாக அல்லும் பகலும் ஆராய்ச்சி செய்து, கடைசியாக நமது இந்திய சகோதரர்கள் நல்வாழ்வு பெற்றுய்வதற்கு எளிதிலாற்றக் கூடிய—இம்மையில் சுகத்தையும் மறுமையில் மோட்சத்தையும் தரக்கூடிய சில அறச்செய்கைகளைச் செய்யுமாறு உபதேசித்தருளினர். அவைகளில் ராட்டினம் சுற்றுதலும், கதராடை தரித்தலும், திலகர் நிதிக்குதவிசெய்தலும், மதுபானத்தை விலக்கலும், முக்கியமான கடமைகளாகும். மேற்கூறியவைகளில் கதராடை தரித்தலைப்பற்றி விவரிப்பது சாலவும் நன்று! ஏனெனின், சமீபத்தில் தீபாவளி பண்டிகை வருதலாலும் மகாத்மாஜி தவச்சாலை புகும்போது கதர் கதர் என்றே கூறினமையாலு மென்க! பலவகையாலும் நன்மையைத் தருகின்றகதராடையின்சிறப்பைப்பற்றி, கல்வி அறிவில்லாச் சிறியேனால் கூற இயலாதெனினும், அவாமிகுதியினால் சில கூறுகின்றேன். நேயர்கள் இதன்மீது கண்ணோட்டம் செலுத்துமாறு பணிவுடன் கேட்டுக் கொள்ளுகிறேன். நமது நாட்டில் ஏழை இந்தியர்கள் அடையும் துன்பம் அளவிடற் பாலதன்று! நமது சகோதரர்கள் காலைமுதல் மாலைவரையில்உழைத்தும்வயிறார உணவு கிடைப்பதில்லை. நமது நாட்டில் வயிறார உணவுகொள்வோர் மிகச்சிலரே தவிர, லெக்ஷக்கணக்கான தொழிலாளர்கள் நமது நாட்டில் வேலை அகப்படாமல் ஆப்பிரிக்கா, பிஜி முதலிய அந்நிய நாடுகளுக்குச் சென்று, அங்கு அந்நிய சகோதரர்களால் சவுக்கினாலடிபட்டும், இன்னும் பலவிதக் கொடுமைகளுக்குள்ளாகியும், நெற்றி வியர்வை கீழே விழ அல்லும் பகலும் உழைத்து அரைவயிற்றுக்குக் கூட உணவு அகப்படாமல் தவிப்பதைக் கேட்கும் மக்களாகப் பிறந்த எவர் மனம்தான் பதைபதைக்காது? இந்த நிலைமையில் சமய சஞ்சீவிபோல் மகாத்மாஜி நம்மிடைத் தோன்றி, கைராட்டினம் என்னும் சக்கரத்தைச் சுழற்றி, அதனால் வரும் நூலாலாய கதரை உடுத்துவது தான் இந்தியாவின் க்ஷேமத்திற்கு ஒப்பற்ற மருந்தாதமென உபதேசித்தார். இதை ஆயிரக்கணக்கான சகோதரர்கள் பணிவுடன் ஏற்று ராட்டினம் சுழற்றித்தாங்கள் வெகு நாளாக அந்நிய ஆடை உடுத்தினதின் பாபத்தை நிவர்த்தி செய்து கொள்வாராயினர். நமது தமிழ் மாகாணம் தவிர, மற்ற மாகாணத்தினர் கோடிக் கணக்கான திரவியத்தைப் பெற்றுக் குபேரவாழ்க்கை வாழ்பவர் முதற்கொண்டு கீழ்த்தர உத்தியோகஸ்தர்வரையிலுமுள்ள யாவரும் கதராடையை மிக மேன்மையாகவெண்ணி உடுத்துவாராயினர். தமிழ் நாட்டுக் கணித்தாகவுள்ள தெலுங்கு தேசத்திலும் அந்நிய ஆடை அணிந்திருக்கும் மக்களைக் காண்பது மிக அரிது. நாம் மாத்திரம், தேசத்தில் லெட்சக்கணக்கான மக்கள் பட்டினி கிடந்து வருந்துகையில்—பஞ்சத்தாலும் பிணியாலும் வாடுகையில், ௯௦௦௦மல்போன்ற அந்நியநாட்டுத் துணிகளில் மோகங்கொண்டு உடுத்துவோமானால், நம்மைவிட இழிவினோர் வேறெவருமில்லை என்றே ஆன்றோர் கூறுவர்.

(இன்னும் வரும்)

தே. சிவராமன்,
காரைக்குடி.

# ரெங்கூனில்

சரஸ்வதிவிலாசவாசகசாலைச் சார்பில்

# ஜாதீயப் பிரசங்கம்.

(காரியதரிசி அறிவிக்கிறார்)

நிகழும் புரட்டாசிமீ கவ இரவு அ-கூ0 மணிக்கு திருவாளர் வெ. கண. வெ. சொக்கலிங்க ஐயா அவர்கள் அக்கிராசனத்தில் நடைபெறவாரம்பித்தது. இருநூற்றைம்பதின்மருக்கு அதிகமாகக்கூடியிருந்த காட்சி மிகமிகப் பாராட்டத்தக்கது. சிவனடியார் திருக்கூட்டத்தாரால் இன்பந் ததும்ப சிவநாமமோதப் பெற்று, தலைவர் முகவுரை கூறிய பின்னர், திருவாளர் நா. அருணசலஞ் செட்டியாரவர்கள் "பணம்" என்னும் விஷயத்தை யெடுத்துக்கொண்டு, நல்வழியிற் பொருளீட்டல் வேண்டுமென்றும், அவ்வாறீட்டிய பொருளைச் 'செட்டாகச் சீரிய வழியிற் செலவு செய்யவேண்டுமென்றும், அநாவசியமான செலவுகள் அறவே ஒழியவேண்டுமென்றும், மிக இனிமையாகப் பேசினார்கள். அதன்பின்னர் திருவாளர் மு. சோசமங்கரம் செட்டியாரவர்கள் "மணம்" என்னும் விஷயத்தை யெடுத்துக் கொண்டு, குலம் நலம் குணம் வயதுமுதலிய பொருத்தங்கள் செவ்வனே கவனித்துத்திருமணமியற்றலே சாஸ்திர யுக்தமென்றும், அவ்வாறில்லாதது துன்பத்தைத் தரத்தக்கதென்றும், இவ்விதவிவாகங்கள் பலநடைபெற்று வருகின்றனவென்றும், இனியும் அவ்வாறியற்றிக் கொண்டு போவோமானால் ஜாதி முன்னேற்றத்திற்கு நிச்சயமாகப் பெருத்த விடையூறாக விருக்குமென்றும், "நம்மவருள் ஒரு குடும்பத்தில் முதலிற் பெண்ணொன்றும் சிறிது காலஞ் சென்று ஆணொன்றும் பிறந்து பெண்ணைக் கலியாணம் செய்து கொடுத்துச் சிறிது நாளில் ரூ கரு,000 வரைவைத்துவிட்டு, தகப்பன் இறந்துவிடவே, தாய்மிகவருந்திக்கடனும்வாங்கித் தனக்குக் கலியாணம் செய்து சிறிது நாளில் அவளும் இறந்துவிட, நம்மவர் வழக்கப்படி வீட்டிலிருக்கும் சாமான்களைத் தன் தமக்கை அள்ளிக்கொண்டு போய்விட தன் கல்யாண நிமித்தமாகத் தன் தாய் சேமித்து வைத்த கடனை நிவாரணஞ் செய்தற்பொருட்டு வியாபார ஸ்தலம் வந்துவிட்டான் என்றுவைத்துக்கொள்வோம். இவ்வளவு இம்சைக்குள்ளாய இவன் சம்சாரம் நீண்ட ஆயுளோடிருக்க வேண்டுமென்றுதான் நானும் கடவுளைப் பிரார்த்திக்கின்றேன். ஏதோ காலவித்தியாசத்தால் குழந்தையில்லாமற் சம்சாரமும் இறந்துவிட்டால்.........அப்பையனின் மாமனார் வீடு ஒரு நீண்ட ஜாப்தாவைக் கொண்டு வந்து ஜப்திசெய்த மாதிரியாகக் கொண்டுபோய்விடுகிறார்கள். தாயிடத்திருந்த சொத்துத்தமக்கைக்குத் தத்தமாகிவிட்டது. தன்னுடைய சொத்துக்களையும் தன்மாமனார் வீட்டுக்கு ஓடிவிட்டன. பையன் எப்படியும் ஊருக்கு வரத்தானே வேண்டும். அப்படி வந்தாலும் சமையற் சாமான் யார் வீட்டிற் கடன்வாங்குவது? யாரேனும் ஒருவர் ஓரிரவு வந்து தங்குவாரானால் படுக்கை யார் வீட்டிற்றப்போய் இரவற் கேட்பது? அந்தோ! மிக உன்னதமான குலத்திற் பிறந்ததற்கு இதுதானா கதிமோக்ஷம்" என்றும் மிக இரக்கமாகப் பேசினார்கள். அதன்பின்னர் திருவாளர் அழ. அருணசலஞ் செட்டியாரவர்கள் "ஜாதீய முன்னேற்ற அறிகுறிகள்" என்னும் விஷயத்தை எடுத்துக்கொண்டு பேசினார்கள்.

அதன் பின்னர் திருவாளர் மேலப்பட்டான் மெ. சாமிநாதன்செட்டியாரவர்கள் "நமது ஜாதி" என்னும் விஷயத்தை யெடுத்துக் கொண்டு கலியுகந்தொட்டு நமது வாழ்க்கையை ஆரம்பித்து தங்குதடையின்றி நீண்டநேரம் தக்க ஆதாரங்களுடன் கேட்போர் மனதிற் பதியும்படி ஒவ்வொன்றாக விளக்கிக் காட்டி நமது வாலிபர்கள் இப்பொழுது மணந்து கொண்டிருக்கும் கலியாணம் வருங்காலத்திற்கு மிகுந்த நன்மையைத் தரத்தக்கதென்றும், ஊழியர் சங்கத்தார் உங்கள் ஆசீர்வாதத்தை மேற்கொண்டு ஜாதீய முன்னேற்றத்திற் குழைக்கும் விஷயத்தில் ஒரு சிறிதும் பின்வாங்கப் போவதில்லையென்றும், எடுத்துக்கொண்டிருக்கும் விஷயம் கலியாண விஷயமென்றும், விடாமுயற்சி உடையவர்களுக்குக் கடவுளும் அதற்குதவிசெய்துதான் தீரவேண்டுமென்றும் மிகுந்த ஊக்கத்தோடும் உறுதியோடும் உண்மையோடும் சபையோர்மனம் உருகும்படியாக மிக உருக்கமாகப் பேசினார்கள். அதன் பின்னர் தலைவரவர்கள் நீண்ட கரகோஷத்தினிடையே எழுந்து உண்மையான ஜாதியபிமானத்தை வீரச் சொற்களாற் காட்டி ஒவ்வொருவரின் உபந்நியாச சாராம்சத்தைத் தனித் தனியாக எடுத்துக் கொண்டு சாஸ்திரோக்தமாகப் பல சுருதி மேற்கோள்களுடன் விளக்கிக் காட்டி, முன்னர் பெண்ணில்லாத காலத்து நமது வைசியர்கள் வேளாளர் குலத்தில் சாஸ்திரோக்தமாக முறைப்படி பெண்ணெடுத்துக் கொண்டிருப்பதைப் பலர் அறிந்திருக்கலாமென்றும், இப்பொழுதும் பெண்சுலபமாகக் கிடைக்க வழியின்றிப் பெண் வைத்திருப்பவர்கள் செய்துகொண்டு வருகின்றமையால், முன்னோர் சென்ற நல்வழியில் ஊழியர்சங்கத்தார் மூலம் நமது வாலிபர் இப்பொழுது மணமியற்றிக் கொண்டிருப்பது சுருதி யுக்தி அனுபவத்திற்கு மிக மிகப் பொருத்தமுடையதென்றும் மணமக்கள் நீடுவாழவேண்டுமென்றும் இம்மாதிரிக் கலியாணங்கள் இவ்வேளாளர் குலத்திலேயே நடைபெறவேண்டுமென்றும், அப்படி நடைபெறுவதற்கு நம்மாலான உதவியை ஒவ்வொருவரும் புரியவேண்டுமென்றும் நண்பர் சாமிநாதன் செட்டியார் சொல்லியவாறு சங்கத்தார் மணமியற்றிக் கொண்டவர்களையே சங்கத்திற் சேர்த்துக் கொண்டு வருவதால் தங்களுடைய சுயநலங் கருதிச் செய்கிறார்களென்று சொல்லுதற்கிடமில்லையென்றும், சங்கத்தார் செய்துவருவது உண்மையான ஜாதியபிமானச்செயலென்பதை யாரே ஆக்ஷேபிக்க முடியுமென்றும், அவர்களைப் போல் நாம் ஒவ்வொருவரும் பாடுபடக்கடமைப்பாடுடையோமென்றும், இப்பொழுது பெரும்பாலாக நமது ஜாதியிற் பணங் காரணமாகச் சிறிய பையன்களுக்குப் பெரிய பெண்களைக் கலியாணம் முடித்துவிடுகிறார்களென்றும், அது மிகமிகத் தவறென்றும், அதனாற் சுகாதாரம் பாழ்பட்டு விடுவதோடு "இல்லறதர்மம்" பற்பல விடையூறுகளாற்றடைப்பட்டுப் பல துன்பங்களுக்குப் பல குடும்பங்கள் ஆளாகியிருப்பதைப் பலர் அறிந்திருக்கலாமென்றும், அவ்வாறாய மணம் இனி நமது சமூகத்தில் நடைபெறக் கூடாதென்றும், ஊழியர் சங்கத்தார் இதனைக் கவனிக்க வேண்டுமென்றும் இன்னும் பல உண்மை நிரம்பிய சொற்களால் இன்பந்ததும்பக் கேட்போர் பரவசமடைய சர்க்கரைப் பந்தலிற்றேன்மாரி பொழிவதுபோற் பேசி முடித்தார்கள்.

திருவாளர் பக்கோக்கூ நா. அழகப்ப செட்டியாரவர்கள் "மணமக்கள் நீடுவாழ வேண்டு"மென்ற ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தார்கள். திருவாளர் நா. அருணசலஞ் செட்டியாரவர்கள் ஆதரிக்க சபையோரால் ஏக மனதாய் மிகுந்தகரகோஷத்தினிடையே தீர்மானம் நிறைவெய்தியது. அதன் பின்னர் திருவாளர் மு. சோமசுந்தரஞ் செட்டியாரவர்கள் வந்தனோபசாரங் கூற இரவு கஉமணிக்குச் சபை மங்களகரமாக மிகுந்த குதூகலத்துடனும் நமப் பார்வதி பதயே என்னும் அரிய மந்திரத்துடனும் இனிமையாக நிறைவெய்தியது.

சுபம்!



# கீதாரகஸ்யம்.

## ஸ்ரீலோகமான்ய பாலகங்காதர மஹரிஷியின் உபந்யாஸம்.

திருவாளர் மோ. வே. கோவிந்தராஜ ஐயங்கார் அவர்கள் மொழிபெயர்த்து எழுதியது:—

அமராவதி, ககூகஎ.

பகவத் கீதையைப் பற்றித் தற்போது நான் உபந்நியஸிக்கப் புகுந்ததற்குக் காரணமின்னதென்றுசொல்லவிரும்புகின்றேன். நான் சிறியவனாக இருந்தபோது மதஸம்பந்தமான விஷயங்கள் தத்வசாஸ்திர உண்மைகள் ஆகிய இவைகட்கும் நமது தினசரி வாழ்க்கைக்கும் யாதொரு விதமான சம்பந்தமும் இல்லையென்று பன் முறையும் எனது பெரியோர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன் "மனிதன் அடையவேண்டியதாக எண்ணப் படுகின்ற உயர்ந்தகதியாகிய மோக்ஷமென்னும் பதத்தை யொருவன் அடைய விரும்பினால், உலக சுகங்களில் மூழ்கி நன்றாய் அனுபவித்துத் திருப்தி தோன்றிய பின்னர், உலக சுகங்களிலே வெறுப்புத் தோன்றி வெளிக்கிளம்ப வேண்டும்; ஒருவன் இரண்டு யஜமானர்கட்குத் தொண்டு புரிய முடியாததுபோல், உலகம், கடவுள் ஆகிய இரண்டிற்கும் ஒருவன் ஒரே சமயத்தில் ஆட்பட்டிருக்க முடியாது" என்று சொல்லக் கேட்டிருக்கிறேன்.

இது எனக்கு மிகுந்த ஆச்சரியத்தைத் தந்தது. அது முதல் இதைப் பற்றிப் பல முறை நான் சிந்தித்துக் கொண்டேயிருந்தேன். எனக்குள் ஒரு கேள்வி தோன்றியது, "ஒரு மனிதன் தனது பூர்ணத்வத்தை யடையுமுன் உலகத்தை வெறுக்க வேண்டுமென்று எனது மதம் சொல்லுகிறதா? மோக்ஷமென்பதை யடைந்தால்தானே மனிதன் பூர்ணத்வத்தையடைந்தவனாவான். மனிதப் பிறப்பின் பயன் அதுதானே. அப்படியிருக்க அவர்கள் சொல்லும் அபிப்பிராயம் பொருத்தமில்லாமலிருக்கிறதே. இப்படிப் பொருத்தமில்லாத விஷயம் மதவுண்மை யாகுமா? உலகில் உயர்ந்த மதமாகிய எனது இந்துமதம்— ஸநாதனமதம் இப்படியும் சொல்லுமோ? இதனை நன்கு ஆராய்ந்துபார்க்கவேண்டும்" என்று பல முறையும் சிந்தித்தது உண்டு. கடைசியில் ஒரு விஷயம் தீர்மானத்துக்கு வந்தது. ஸநாதன தர்ம மதத்தின் பல கொள்கைகளையும் தத்வங்களையும் விவரித்துக்கொண்டிருப்பது ஸ்ரீபகவத்கீதைதான் என்றுபல பிரிவினரும் ஒப்புக்கொண்டிருப்பதால் என்னுடைய கேள்விகட்குத் தக்க ஸமாதானம் அதனுள் கிடைக்கலாமென்னும் ஓர் உறுதிப்பாடு உண்டாயிற்று. அன்று முதல் நான்கீதையை ஆராய்ந்து படிக்க ஆரம்பித்தேன்.

நான் கொண்ட தத்வவுண்மைகட்குப் பொருத்தமான சில அபிப்பிராயங்களை வைத்துக்கொண்டுநான் அதனைப்படிக்க ஆரம்பிக்கவில்லை; என்னுடைய மதக்கொள்கைகளை யுறுதிப்படுத்தக்கூடிய சில ஆதாரங்கட்காக நான் அதனைப்படிக்க ஆரம்பிக்கவுமில்லை. யாதொருகொள்கையும் யாதொரு தீர்மானமும் வராத நிலைமையில் நான் அதனைப்படிக்க ஆரம்பித்தேன். "அந்த பகவத் கீதை என்ன சொல்கிறது? அதனுடைய மதந்தானென்ன?" என்று அதனைக்கொண்டே அதனையாராயப்புகுந்தேன். முன்னமே தயாரிக்கப்பட்ட சிலகொள்கைகளில் உறுதிப்பாடுடையவொருவன் தனதுமாறுபட்ட மனதுடன் அதனைப்படிக்க ஆரம்பித்தானானால், அதனுள்சொல்லப்படும் உண்மைகளெல்லாம் தனது கொள்கைகளையே யுறுதிப்படுத்திக்கொண்டிருக்கின்றனவென்னும் தீர்மானத்துக்கே வந்துசேர்வான்; உதாரணமாக ஒரு கிறிஸ்தவரை யெடுத்துக்கொள்ளுங்கள்; சிலர் தமது முடிந்த அபிப்பிராயத்துடன் கீதையைப் படிக்க ஆரம்பித்தாரானால், "தமது மத உண்மைகள்தாம் அதனுள் ஆங்காங்கு சிதறிக்கிடக்கின்றனவென்றும், கீதை தமது பைபிள் என்னும் புஸ்தகத்திலிருந்து பல விஷயங்களைத் திருடிக்கொண்டிருக்கின்றதென்றும் எண்ணித் திரும்புவாரேயல்லாமல், அதன்வழி தம் மனதைச்செலுத்தமாட்டார். தமது மனதின்வழி யதனைத் திருத்திக்கொள்வர். இது இயல்பு.

இவற்றையெல்லாம் பற்றி நான் என்னுடைய "கீதாரஹஸ்யம்" என்னும் புஸ்தகத்தில் நன்றாய் விவரித்திருக்கிறேன்; அதனால் இங்கு அதிகமாகச் சொல்லத் தேவை யில்லையெனினும், ஒரு விஷயம் உங்கட்குத் தற்போது சொல்ல விரும்புகிறேன். கலக்கப்பட்ட மனதுடன் ஒருவன், "பகவத் கீதை" போன்ற உயர்ந்த கிரந்தங்களில் நுழைந்துவிடப்படாது; அப்படி நுழைந்தால், பெரும்பாலும் உண்மை அறியமுடியாது; ஆகையால் கலக்கப்பட்ட வேறு கொள்கைகளில் உறுதியடைந்த சில மதங்கட்கு ஆதாரம் தேடவேண்டியதான—பரிஹாஸத்துடன் கூடியதான மனதுடன் கீதையைப் படிக்கப்படாது என்று உங்களை வற்புறுத்திக் கேட்டுக்கொள்கின்றேன். இப்படிப் படிக்கப் புகுவது சிரமமான காரியந்தானென்பது எனக்கு நன்றாகத் தெரியும். என்றாலும், இந்த உறுதியுடன் படிக்கப் புகாமற்போனால் உண்மையை அறிய முடியாது என்று என் அநுபவ முறையில் கண்டுள்ளதைச் சொன்னேன். "சுத்த மனதுடன் நுழைந்தவர்க்கு அதனுடைய உண்மைகள் எத்தனை கஷ்டமானவையாக இருந்தாலும், ஒரு முறை யிருமுறையில் சுலபமானவையாக மாறிவிடும்" என்னும் விஷயத்தையும் இங்கு வற்புறுத்திச் சொல்லுகிறேன். இனி எடுத்துக் கொண்ட விஷயத்தில்புகுகின்றேன்.

முதன் முதலில், பகவத் கீதையானது எந்த சமயத்தில், எந்த நிலைமையிலிருக்கும்போது, யாரால் யாருக்குச் சொல்லப்பட்டது என்னும் விஷயத்தை நாம் ஆராய்ந்துணர வேண்டும். சுத்தவீரனான அர்ச்சுனனுக்கு எதிர் பக்கத்தில் நின்று யுத்தம் செய்யச் சித்தராக இருக்கும் பீஷ்மத்ரோணாதிகளாகிய தனது பெரியோர்கள் பேரில் வைத்துள்ள பக்தியின் மிகுதியால் அவர்களோடு யுத்தஞ்செய்வதற்கு மயங்கிச் சோர்ந்து, தனது ஸ்வதர்மத்தை நழுவவிட்டபோது, பூபாரத்தைத் தீர்த்து சிஷ்டபரிபாலன முகமாகத் தர்மஸ்தாபனஞ் செய்வதற்கு அவதரித்துள்ள மஹா புருஷராகிய ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவினால் உபதேசிக்கப் பெற்றது. இடமோ யுத்தரங்கம்; அதிகாரியோ சுத்த வீரனாகிய அருச்சுனன்; உபதேஷ்டாவோ பூபாரந் தீர்க்க வந்தபுண்யபுருஷன்; பயனோ மயக்கமொழிந்து, தேஹபர்துக்வத்தை யொழித்து ஸ்வதர்மமாகிய யுத்தஞ் செய்யத் தூண்டினமை. இவற்றை யெல்லா மாலோசித்துப் பார்த்துத்தான் இந்த நூலினுடைய முடிவான கொள்கையைத் தீர்மானிக்க வேண்டும். இதனுள் அவசியமறியவேண்டியவைகளாகக் காணப்படும் இவ்விஷயங்களைச்சிறிதேனும் பொருள்படுத்தாத, இதனது பயனைக்கூறுவது அறிவுடைமையாகாது. பலதிறப்பட்ட வ்யாக்யான கர்த்தர்கள் இந்த நூலுக்கு உரை எழுதியிருக்கிறார்கள். அவரவர் தத்தம் மதத்துக்கு இந்தநூலை யாதாரமாக வைத்து, தமது மதப்படியே பொருள் செய்திருக்கிறார்கள். இந்த நூலைச் செய்தருளிய வியாஸராவது இதனை அர்ச்சுனனுக்கு உபதேசத்தருளிய ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவாவது இப்படிப் பலதிறப்பட்ட பொருள் தோன்றும்படிச் சொல்லியிருக்கக் காரணமில்லை. விஷயம் தோன்றிய இடமோ மிகவும் அவசரமான போர்க்களம். ஸ்வரூபமோ கடமையைச் செய்யும்படி வற்புறுத்துவது. பிரயோஜனமோ அதிகாரியாகிய அர்ச்சுனன் தனது கடமையில்

பிரவேசித்தது. ஆகையால்,ஒரேஉறுதியான பொருளைத்தரும்படிச்சொல்லப்பட்டிருக்க வேண்டுமேயன்றி, பல படியாகப் பொருள்கொள்ளும்படியான காவிய வகையைச் சேர்ந்ததன்று. ஆதலால், நாம் நமது முன்னைய வ்யாக்யானக்காரர்களை ஒதுக்கி வைத்துவிட்டு, விஷயத்தைச்சொன்னவருடைய அபிப்பிராயம் என்னவென்று ஆராய்வதில்தான் நுழையவேண்டும். அப்படியேதான் நான் முயன்று படித்துச் சிந்தித்து ஆராய்ந்து ஒரு திருப்திகரமான முடிவுக்கு வந்திருக்கிறேன்:—எனக்குத் தனியான ஒரு கொள்கையை யுறுதிப்படுத்திக் கொண்டு அதனை மெய்ப்பிக்க இந்த நூலை யாராயவில்லையாகலின், நான் கண்டபொருள், இந்தநூலைச் சொன்னவருடைய அபிப்பிராயமாகவே இருத்தல் வேண்டுமென்பது எனது துணிபு. நான் முடிவாகத் தெரிந்து கொண்ட விஷயத்தைச் சொல்லுகிறேன். ஒருவன் ஞானவழியினாலாவது பக்திவழியினாலாவது, தான் அடையவேண்டிய உத்தமகதியாகிய, பரமாத்மாவுடன் ஐக்யமாதலை யடைந்தபின்னரும்கூட, இந்த உலகில் தான்செய்யவேண்டிய கடமையை விடாமல் செய்தே தீரவேண்டுமென்பதே. இந்தக்கடமையை ஒவ்வொரு மனிதனும் செய்தே தீரவேண்டும். அந்தக் கடமையானது உலகத்தை யொழுங்கான பாதையில் நடத்திக்கொண்டுபோகக்கூடியதாகவே யிருத்தல் வேண்டும். இதுதான் கடவுளது அபிப்பிராயம். இதற்காகவே அவர் உலகத்தில் முத்தொழிலையும் செய்து கொண்டிருக்கிறார். இந்தக்கடமையானது செய்பவராகிய தம்மைக்கட்டுப் படுத்தாதிருக்கும் படியும் செய்து தீரவேண்டும்; அதாவது ஈச்வர கைங்கரியமாக எண்ணிச் செய்தல் வேண்டும். இதுதான் நான் பகவத்கீதையினால் படித்துக் கொண்ட தீர்மானமான விஷயம். இதுதான் கர்மயோகமென்று சொல்லப்படுவது; இந்த நூலில் பக்தியோகமும் இருக்கிறது; ஞானயோகமும் இருக்கிறது; இல்லையென்று யாரும் சொல்லமுடியாது; அப்படிச் சொல்லவுமில்லை; ஆனால், அவ்விரண்டு யோகங்களும் இந்த நூலினால் வற்புறுத்தப் பெறுகிற கர்மயோகத்துக்கு ஸாதனமான உபாங்கங்களேயாகும். இந்த நூலானது, யுத்த ஸமயத்தில் மயக்கமடைந்து நின்ற அர்ச்சுனனாகிய சுத்தவீரனை, அவனது ஸ்வதர்மமாகிய யுத்தத்தில் புகும்படி வற்புறுத்திய தொன்றாகும் போது, ஞானயோகத்தை மாத்திரமாவது பக்தியோகத்தை மாத்திரமாவதுதான் இந்த நூல்கற்பிக்களழுந்ததென்று எப்படிக்கூற முடியும்? எப்படி யாகாயமானது, பிராணவாயுவால் மாத்திரமாவது ஜலவாயுவால் மாத்திரமாவது மற்ற வாயுக்களால் மாத்திரமாவது தனித்தனியே நிறைந்திராமல், எல்லாவாயுக்களும் அதனதன் தக்க பரிமாணங்களுடன் கலந்தே நிறைந்திருக்கின்றதோ, அப்படியே இந்த பகவத்கீதையும் ஞானயோக பக்தியோக கர்மயோகங்கட்கு வேண்டிய கொள்கைகளால் நிறைக்கப்பட்டிருக்கின்றது. என்றாலும், ஸ்வதர்மத்தை வற்புறுத்த வந்த தொன்றாதலால், அம்மூன்றிலும் கர்மயோகமே பிரதானமாக நின்று நிலவுகின்றது; ஆகையினால் மற்ற இரண்டு யோகங்களும் அந்தக்கர்மயோகத்துக்கு ஸாதகங்களாக இருத்தல் அவசியமாயிற்று. "ஞானயோகத்தினாலும் பக்தியோகத்தினாலும் ஜீவன் பரமாத்மாவுடன் ஐக்யமடைந்தாலும் கூட, ஜீவன் கர்மயோகத்தைச் செய்துதான் தீரவேண்டும்" என்று நான் வற்புறுத்திச் சொல்கிறபடியால், எனது பொருள், பெரும்பாலும் இதரவ்யாக்யான கர்த்தர்களினுடைய பொருள்கட்குமாறுபடும் என்பதில் யாதொரு சந்தேஹமுமில்லை உலகத்தில் தத்வம் மூன்று; ஈச்வரனும் ஜீவனும் உலகமும் இம்மூன்றும் ஒற்றுமைப் பட்டே யிருக்கின்றன என்பது தத்வ விஷயம். பிரபஞ்சம் தோற்றத்தில் இருந்து கொண்டிருக்கிறது. ஸர்வசக்தனாகிய கடவுள் தமது இச்சையைச் செலுத்துகிறார்; அதனால் உலகம் நடைபெறுகின்றது. 'அற்பசக்தனாகிய ஜீவன் அல்லது மனிதன் கடவுளுடன் ஒற்றுமைப்பட வழிதேடுகிறான். அதற்காக முயல்கிறான்; முடிவில் கடவுளுடன் ஒற்றுமையை யடைகிறான். அப்படி ஒற்றுமையை யடைந்தபோது, "நான்யாதொருகர்மமும் செய்யமாட்டேன்; நான் உலகத்துக்கு உதவமாட்டேன்" என்று ஜீவன் சொல்வானாகில் அது தர்க்க வாதத்தில் நிலைபெற்றிருக்க முடியாது; இது நான்சொல்வதல்ல; கீதை சொல்கிறது; "இந்த மூன்று உலகத்திலும் எனக்கு ஆகவேண்டியது யாதுமில்லையென்றாலும், நான் கர்மம் (தொழில்) செய்யாமலிருக்க முடியாது" என்று ஸ்ரீகிருஷ்ணபரமாத்மாசொல்லுகிறார். இதனை நன்கு ஆராயவேண்டும். அவரும் தொழில் செய்கிறார்; ஏனெனில் தாம் கர்மா செய்யாமற் போனால், உலகம் அழிந்துவிடுமென்று அவர் சொல்கிறார். இதன் பொருளென்ன? கடவுளுடன் ஒற்றுமையை விரும்புகிற ஒவ்வொருஜீவனும் உலகத்துக்கு உபகாரமாகக் கர்மா செய்தே தீரவேண்டும்; அப்படிச் செய்யாமற் போனால், கடவுளுடன் கூடினதாக எண்ணப்படுகிற ஒற்றுமை பூர்ணத்வத்தை யடையாது; ஏனெனில், நிரந்தர ஒற்றுமையையுடைய கடவுள் ஜீவன் உலகம் என்னும் மூன்று தத்வங்களில், கடவுளும் ஜீவனுமாகிய இரண்டு தத்வங்கள் மாத்திரம் ஒற்றுமைப் பட்டாலும் உலகம் தனித்தே நிற்கிறது; ஆகையால் ஒற்றுமை பூர்ணப் படவில்லை. பூர்ணமடையாதது பயனாகாது; வன்மையும் பெறாது; நீடித்தும் இராது; ஆகையால் உலகத்துடனும் ஒற்றுமை பெறல் வேண்டும்; அந்த ஒற்றுமையைப் பெறுவதற்கு ஜீவன் பயனைக் கோராமல் ஏற்ற தொழிலைச் செய்தே தீர வேண்டும்; இதுதான் கர்மயோகம்; இதனைத்தான் கீதா சாஸ்திரம் வற்புறுத்துகின்றது. இது தான் வேதத்தின் முடிந்த பொருள். இத்தன்மையாக ஆராய்ந்துதான் நான் இந்த முடிவுக்கு வந்திருக்கிறேன்; உங்களையும் ஆராயும்படி மன்றாடுகிறேன். இதனால் லௌகிக பாரலௌகிக ஸ்வராஜ்யங்கள் கிடைக்கும்.




சந்தா விபரம்.

இந்தியா முதலிய உள்நாடுகளுக்கு வருஷம் ஒன்றுக்கு ... ரூ—ɔ—c
சிங்கப்பூர் முதலிய வெளிநாடுகளுக்குவருஷம்ஒன்றுக்கு ௬—0—0
தனிப்பிரதி ஒன்றுக்கு ... 0—உ—0

விளம்பர விவரம்.

மாதம் க-க்குபத்தி-க-க்கு... உ0—0—0
ஷ அரைப்பத்திக்கு... கக—0—0

காரியஸ்தர்,
தனவைசிய ஊழியன் ஆலயம்,
காரைக்குடி.

ராய. சொக்கலிங்கத்தால் காரைக்குடி தனவைசிய ஊழியன் அச்சியந்திரசாலையில் அச்சியற்றிப் பிரசுரஞ்செய்யப்பெற்றது

